KALKI 25.5.86 ரூ..1.50

# கல்கி

## மாணவர் தலைவர்; மாநில முதல்வர்!

மஹந்தா-பேட்டி

கோத்ரெஜ் படைத்துள்ள சுகபோகத்தின் சிகரம் : மார்வல் லக்ஷரி சோப்




செழுமையான
க்ரீம்போன்ற நுரை
மற்றும் மனம் மயக்கும் நறுமணம்

a:B:GS:2704 TM

விலை ரூ.4.50 (தல வரிகள் தனி)



அடேயப்பா போட வைத்த ஆன்மீக மாநாடு

தலைக்கு மேலே தூக்கினபடி நின்ற இடத்திலேயே ஒரு ரவுண்டு அடித்தார். "ஓம் சக்தி! பராசக்தி!" என்ற குரல் விண்ணை எட்டியது.

* மேடையில் அமர்ந்திருந்த இன்னொரு முக்கியமான புள்ளி லட்சுமி பங்காரு. அவரது மடியில் சிவப்புப் பாவாடை, சட்டையில் ஒரு குழந்தை.
* ஆங்கிலத்தில் ஜனாதிபதியின் பேச்சுப் பிரதியைப் பத்திரிகையாளருக்கு முன்கூட்டியேதந்துவிட்டார்கள். ஆனால் ஜனாதிபதி பேசியது இந்தியில். 40 நிமிடங்களுக்குக் கைகளை ஆட்டி, உணர்ச்சி பொங்கப் பேசினார். ஜனாதிபதியின் பேச்சைச் சரளமாய்த் தமிழாக்கம் செய்தவருக்கு ஸ்பெஷல் பாராட்டு.
* விழா மலரின் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்ட ஆர். எம். வீக்கு ஜெயில் சிங் மாலை போட முயல, அவர் அதை வாங்கி, ஜெயில் சிங்கிற்கே போட முயல,



# செய்திகளின் பின்னணியில்...

**ஓம் சக்தி! பராசக்தி!**

* மேல்மருவத்தூர் சக்தியின் பக்தர்கள் 'உலக ஆன்மீக மகாநாடு' நடத்தினார்கள்.
* மெரினாவில் திரண்டிருந்தோரை வறுத்தெடுத்துக் கொண்டிருந்த வெயிலைப் பொருட்படுத்தாது சக்தியின் தொண்டர்கள் அமைதி காத்தது பாராட்டப்பட வேண்டிய விஷயம்.
* ஆங்காங்கே குளோஸ்டு சர்க்யூட் டெலிவிஷன்கள் வைக்கப்பட்டிருந்தன. டெலிவிஷன் நிலையத்தின் அத்தனை காமிராக்களும்மெரினாவில்தான்கேம்ப்!டெலிவிஷனில் பார்த்தபோதுதான் கூட்டத்தின் முழு பரிமாணத்தை உணர முடிந்தது.
* பிரும்மாண்டமான மேடையிலே செவ்வாடை உடுத்தி, சூப்பர்வைஸ் பண்ணிக் கொண்டிருந்தார் ஒருத்தர். உற்றுப் பார்த்தால் — அட! ஜேப்பியார்! மாநாட்டின் போது, ஏற்பாடுகளை முன்னின்று நடத்த வேண்டும் என்பது 'அம்மா'வின் ஆணையாம். சிரத்தையாய்ச் செய்து கொண்டிருந்தார்.
* எல்லாருக்கும் முதலாகவே வந்துவிட்டார் எம். ஜி. ஆர். அப்புறம் வந்தவர் ஆர். எம். வீ. அடுத்தது பங்காரு அடிகளார். மேடைக்கு வந்ததும், இரண்டு கைகளையும்

கடைசியில் ஜனாதிபதி, மாலையை பங்காரு அடிகளின் கழுத்தில் போட்டுவிட்டார்!

* மேல்மருவத்தூர் ஆதி பராசக்தி அறக்கட்டளை, பாலிடெக்னிக், இஞ்சினிரிங் காலேஜைத் தொடர்ந்து மெடிகல் காலேஜ் ஆரம்பிக்கப் போகிறதாம். ஆதிபராசக்தி பல்கலைக்கழகம் இவர்கள் லட்சியமாம்.
* வழக்கமாய் பூஜை என்றால் 108 அல்லது 1008 கலசம் வைப்பார்கள். மேல்மருவத்தூர்காரர்கள் 10,008 கலச பூஜை நடத்தினார்கள், அடேயப்பா!
* இரண்டாம் நாள் பல்வேறு மதத்தினரின் நோக்கில் உலக சமாதானம், ஆன்மீகம் என்று கருத்தரங்கம். இதிலே ஸ்ரீலங்கா, ஜப்பானிலிருந்து கூடப் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்.
* நலிவுற்ற ஏழைகளுக்குக் கறவை, உழவு மாடுகள் வழங்கல், தொழில் செய்ய உதவித் தொகை வழங்குதல், இலவச கண் சிகிச்சை முகாம் நடத்தல், ஊனமுற்றோர்க்கு உபகரணங்கள்வழங்குதல்போன்றவை ஆதிபராசக்தி அறக்கட்டளையின் சேவைகள்.
* மக்கள் பேசிக் கொண்டது:

  "சென்னை முழுக்கப் போஸ்டர்கள், கட் — அவுட்கள் இவற்றைப் பார்த்தால் போப் ஆண்டவருக்குப் போட்டியா





* யார் இளமை?

அல்லது சினிமாத்தனமா?''

''அ ட போய்யா! விளம்பர யுகம்!''

''புலி, சிங்கத்தை எல்லாம் போதிய பாதுகாப்பில்லாமல் ஊர்வலத்தில் கொண்டு செல்ல அனுமதித்திருக்கிறார்களே!''

''ஒரு சிறுத்தை தப்பி மக்கள் மேலே பாயப் பார்த்துச்சு. நல்லவேளை கட்டிப் பிடிச்சுட்டாங்க!''

'மெரினாவில் அமைக்கப்பட்டுள்ள மேல் மருவத்தூர் கோவில் மாதிரியை பர்மனென்டாய் விட்டு வைக்காம இருக்கணும். இல்லேன்னா இது பின்னால் பிரச்னைகளுக்கு வழி கோலும்!

## பெரியாருடன் போட்டி!

நீண்ட காலம் வாழ்ந்த அரசியல்வாதிகளான ராஜாஜி, பெரியார் ஆகியோருடன் போட்டி போடத் தயாராகிவிட்டார் பக்தவத்ஸலம்! 89 வயதில் விமான நிலையம் சென்று குடியரசுத் தலைவரை வரவேற்றிருக்கிறார். மாலை அணிவிக்கச் சென்ற அவருக்கே மாலை மரியாதை செய்திருக்கிறார் ஜெயில் சிங்! பக்தவத்ஸலம் கல்வி அறக்கட்டளையின் வெள்ளிவிழாவில் பேசிய ஜெயில் சிங், 'தேசிய ஒருமைப்பாடு, நல்லொழுக்கம் இவற்றை வளர்ப்பதே கல்வியின் முதல் கடமை' என்ற வழக்கமான பல்லவியைத் திரும்பப் படித்திருக்கிறார். பக்தவத்ஸலமோ, 'பல கல்வி நிறுவனங்களை நடத்தும் இந்த அறக்கட்டளையைத் திறம்பட நிர்வகிப்பது ஓ. வி. அழகேசனே என்பதால் அவர் பெயரிலேயே இந்த அறக்கட்டளை இருக்கலாம்' என்று உபசாரமாக அன்றி மனப்பூர்வமாகக் கூறியுள்ளார்.

'ஹிந்து'வில் பக்தவத்ஸலம் பக்கத்தில் நின்று ஜெயில் சிங் அட்டகாசமாகச் சிரிக்கும் படத்தைக் காண, 'இந்தச் சிரிப்பு வெடிக்க என்ன பேசியிருப்பார்?' என்று மனத்தில் கேள்வி எழுந்தது. ''அட, நான் தான் என் வயசுக்கு ரொம்ப இளமையாக இருப்பதாக எண்ணிக் கொண்டிருக்கிறேன்; நீர் நம்மைத் தோற்கடித்து விடுவீர் போலிருக்கிறதே!'' என்று கூறிச் சிரித்திருப்பாரோ, குடியரசுத் தலைவர்!

## கறிகாயுடன் ஒரு புத்தகமும் வாங்கலாம்!

முப்பது பைசா விலையில் கையடக்கமாகப் பல ஆன்மிக நூல்களை வெளியிட்டார்; பக்தி நூல்களை மட்டும் கடைபரப்பிக் கண்காட்சி நடத்தினார் லிஃப்கோ சர்மா. அவர் மறைவுக்குப் பின்னர் சில ஆண்டுகள் நடைபெறாமலிருந்த இந்தத் தெய்வீகப் புத்தகக் கண்காட்சியை இந்த ஆண்டு மிகவும் அக்கறையோடு மீண்டும் தொடங்கியிருக்கிறார்கள்.

அறுபத்தெட்டு வெளியீட்டாளர்களின் சுமார் ஆயிரத்து முந்நூறு நூல்கள் சென்னை ரங்கநாதன் தெரு லிஃப்கோ அலுவலகம் முன்னால் அமைந்துள்ள அலங்காரப் பந்தலில் ஒழுங்கான வரிசை அமைப்பில் வைக்கப்பட்டிருக்கின்றன.

அதிகமாக விற்பனையாகும் நூல்கள் என்று பார்த்தால் சக்தி வழிபாட்டு நூல்கள்; கந்த சஷ்டி கவசம் போன்ற முருகன் வழிபாட்டு நூல்கள்; பகவத் கீதை, விஷ்ணு சஹஸ்ர நாமம் போன்ற பாராயணப் பதிப்புக்களைச் சொல்ல வேண்டும்.

ரங்கநாதன் தெருவில் கறிகாய் வாங்க வருகிறவர்கள் கூட அப்படியே ஒரு தெய்வீகப் புத்தகத்தையும் வாங்கிக் கொண்டு போகலாம் என்கிற எழுச்சியை இந்தக் கண்காட்சி தோற்றுவித்திருக்கிறது.

''இப்போதெல்லாம் விலை என்பது ஒரு பொருட்டாக இல்லை; புத்தகம் வாங்க வேண்டும் என்ற மனம் வந்துவிட்டால் என்ன விலையானாலும் சரி, வாங்கி விடுகிறார்கள்'' என்கிறார் லிஃப்கோ அதிபர். மனம் வரட்டும் நிறையவே வரட்டும்.

## தடலடி நடவடிக்கை!

தடலடியாகவும், தான்தோன்றித்தனமாகவும் தமிழக அரசு திடீரென்று மேல்சபை ஒழிப்பு மசோதா கொண்டு வந்து சட்ட சபையில் நிறைவேற்றி விட்டது. இதனைத் ''துரதிர்ஷ்டவசமானது'' என்று மிருதுவான வார்த்தையால் வர்ணிக்கும் திருமதி தாரா செரியன் ஆறு ஆண்டுகளாக மேலவை உறுப்பினர். திரு. செரியன் இருமுறை மேலவைத் தலைமைப் பதவியை வகித்தவர். அண்டை மாநிலம் ஒழித்து விட்டது. எனவே

* அடுக்கடுக்காகத் தெய்விகப் புத்தகங்கள்.



நாங்களும் ஒழிக்கிறோம் என்பதும் செலவுக் கணக்குக் காண்பிப்பதும் நொண்டிச் சமாதானங்களே.

''எவ்வளவோ வீண் செலவு நடக்கிறது; மேல் சபைக்கு ஆகும் செலவு மிக உபயோகமான செலவு'' என்கிறார் தாரா செரியன். ''ராஜாஜி, லக்ஷ்மண சுவாமி முதலியார், சத்தியமூர்த்தி போன்ற பல மேதைகள் அலங்கரித்த சபை இது. சட்டமன்றத்தில் நிறைவேற்றப்படும் தீர்மானங்கள் மேல் சபையில் அங்கீகாரத்துக்கு வரும்போது பல திருத்தங்களைச் செய்து முறைப்படுத்தி வழி காட்டியிருக்கிறது மேலவை.

''மேல்சபையின் மதிப்பு சமீப காலமாகக் குறைந்து போயிருக்கிறது என்றால் அதற்குக் காரணம் தேர்ந்தெடுக்கப்படும் நபர்களின் தகுதிக் குறைவு தான். அறிஞர்களை நியமிக்காமல் கட்சி அரசியல், சினிமா நோக்கில் தேர்ந்தெடுக்கப்படவும், நியமனமாகவும் வழி வகுக்கிறார்கள்.

ஆசிரியர்கள், பட்டதாரிகள், உள்ளாட்சிப் பிரதிநிதிகள் போன்றோருக்கு இனி தங்கள் கருத்துக்களை வெளியிட அரங்கமே இல்லை.

''தனக்குப்பிடித்தவர்களை உறுப்பினராக்க முடியாமல் போனதும் எதிர்க்கட்சியினர் அவையில் அதிகபலம் பெற்று விடுவார்கள் என்பதும்தான் மேல்சபை ஒழிக்கப்படக் காரணம் என்று கூறப்படுகிறது. இதை நான் நம்பாவிட்டாலும் அரசின் இந்த முடிவு துரதிர்ஷ்டவசமானது என்பதில் எனக்கு ஐயமில்லை'' என்று வார்த்தைகளை அளந்து பேசுகிறார் பதவி போனாலும் பண்பாட்டைக் கைவிடாத தாரா செரியன்.

**60 க்கு 99 — மார்க் இல்லை; வேகம்!**

சீனிவாசலுவின் வேகம் நிமிடத்துக்கு 99 வார்த்தைகள். இவர்தான் இந்த வருஷம் கோத்ரெஜ்நிறுவனம்நடத்தியடைப்ரைட்டிங் ஸ்பீட் போட்டியிலே தமிழக சாம்பியன். வயது 46.

82 ஆம் வருஷத்திலிருந்து தொடர்ந்து நாலு வருஷங்களாய்க் கலந்து கொள்கிறார். நாலு வருஷங்களாக முதல் இடம் சீனிவாசலுவுக்குத்தான். 82 ஆம் வருஷம் நிமிஷத்துக்கு 85 வார்த்தைகள். 83 ல் நிமிஷத்துக்கு 91 வார்த்தைகள். 84 ல் 96 வார்த்தைகள். 85 ல் அதாவது இப்போது 99 வார்த்தைகள்! அப்படி இருக்கிறது இவர் முன்னேற்ற சாதனை!

1957 ல் தமிழ்நாட்டு அரசாங்க சர்வீஸில் சேர்ந்தவர்; டைப்ரைட்டிங், ஷார்ட் ஹாண்ட் கற்றுக் கொண்டு கடந்த பதின்மூன்று வருஷங்களாய் ஆங்கில ரிப்போர்ட்டராய் இருக்கிறார் தமிழ்நாடு சட்டமன்ற மேலவையில். மேலவை உறுப்பினர்கள், ஆங்கிலத்தில் பேசும்போது அதை அப்படியேசுருக்கெழுத்தில் எழுதிக் கொண்டு டைப் அடித்துத் தர வேண்டும்.

''இப்போது பெரும்பாலான உறுப்பினர்கள் தமிழில்தான் பேசுகிறார்கள். ஆங்கிலத்திலே பேசுகிறவர்கள் லிஸ்ட் சின்னது தான்'' என்கிறார். தமிழில் பேசுகிற உறுப்பினர்கள் இடையிடையே ஆங்கிலத்தில் பேசினால் அதையும் இவர்தான் குறிப்பு எடுத்துக் கொள்ள வேண்டும்.

''உங்களுடைய வேக ஆற்றல் தினப்படியில் உங்களுக்கு உபயோகமாய் இருக்கிறதா?''

''எனக்கு ஷார்ட் ஹாண்டில் நிமிஷத்துக்கு 200 வார்த்தை எழுதிக் கொள்ள முடியும். ஆனால் இத்தனை வேகமாய் ஒருவரும் பேசுவதில்லை. ஆனால் சில சமயம் என்னைச் சில கருத்தரங்குகள், டிஸ்கஷன்கள், இவற்றுக்கு அனுப்புவார்கள். அம்மாதிரி சமயங்களில் உடனுக்குடன் டைப் அடித்துக் கொடுக்கச் சொல்லும்போது வேகமான டைப்பிங் உபயோகமாய் இருக்கும்.''

சீனிவாசலு தரும் சிறு அட்வைஸ்: வேலைவாய்ப்புப்பிரச்னையைக்கருதும்போது படித்துக் கொண்டிருக்கும் போதே, ஷார்ட் ஹாண்ட், டைப்பிங் இரண்டும் கற்றுக் கொண்டு விடுவது இன்றையச் சூழ்நிலையில் புத்திசாலித்தனம்.

அது சரி, மேலவை ஒழிக்கப்பட்டு விட்டதே; இனி சீனிவாசலுவின் உத்தியோகம் கொஞ்சம் 'டல்'லடிக்குமோ?

**— மௌஷ்மி, தில்லப்பா, யெஸ்பால்.**



* மிருதுவான பேச்சு.



* தமிழக சாம்பியன்.




# கல்கி

1986 மே 25
மலர் 44 இதழ் 43
அக்ஷய வைகாசி 11




# எம்.ஜி. ஆரின் சிகரமான சாதனை!

**எம்**.ஜி. ஆர். ஆட்சிக்கு வந்த பிறகு சாதித்துள்ளவற்றில் சிகரமான சாதனை மேலவை ஒழிப்புத்தான்! என்ன ராஜ தந்திரம்! என்ன தீர்க்க தரிசனம்! எவ்வளவு ஆழ்ந்த ஜனநாயகப் பற்று! பிரமிப்பில் மூழ்கித் திக்குமுக்காடிப் போகிறோம்! ஹிட்லரின் மின்னல் வேகத் தாக்குதலைக்கூடத் தோற்கடித்துவிட்டது இதில் எம்.ஜி. ஆர். காட்டிய வேகம்! 'ஒரே மூச்சில் ஏழு ஈக்களைக் கொன்ற சூரன்' என்று சிறு வயதில் வாய் பிளந்து கேட்ட கதையைவிட அதி வீர, பராக்கிரமமான காரியமாயிருக்கிறது இந்த மேலவை ஒழிப்பு!

உதாரணமாக மேலவைக்கு அநாவசியமாக எவ்வளவு செலவாகிறது! அந்தச் சில ஆயிரங்களை மிச்சப்படுத்தினால் எம்.ஜி. ஆர். ஜப்பானுக்குப் பறந்து போய்த் தமிழகத்துக்கு ஆஸ்திரேலிய நிலக்கரி கொண்டு வர, இன்னும் நாலு கப்பல்கள் வாங்கலாமே! அல்லது முதல்வர் அமெரிக்காவுக்குப் பறந்து சென்று நமது போலீஸ் படையினர் முகமூடித் திருடர்களைப் பிடிக்க வசதியாக தாழப் பறக்கும் விமானங்கள் ஒரு டஜன் வாங்கி வரலாமே!

மேலவையை ஆந்திராவில் ஒழித்துக்கட்டிவிட்டார் என்.டி. ஆர். தம்பிக்கு அண்ணன் பின் தங்கலாமா? தமிழகத்துக்கே அது அவமானமில்லையா? 'ஆந்திர மேலவையில் காங்கிரஸ் முட்டுக்கட்டைகளைப் போட்டது; இங்கே அப்படி இல்லையே?' என்று யாரும் அசட்டுத்தனமாகக் கேள்வி கேட்கக் கூடாது. பஞ்சாயத்துத் தேர்தல் முடிவுகள் காரணமாகத் தமிழக மேலவையில் தி.மு.க.வின் பலம் அதிகரிக்கும் என்பது தெரியாதா? அவர்களால் முட்டுக்கட்டை போட முடியாவிட்டாலும் சட்டங்கள் நிறைவேறுவதைத் தாமதப்படுத்த மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? அரசு அலுவலகங்களில் கோப்புகள் தூங்கினாலும் தூங்கலாமேயொழிய, நாங்கள் கொண்டு வர நினைக்கும் சட்டங்களைத் தி.மு.க. தாமதப் படுத்துவதைச் சகித்துக் கொண்டிருப்போமா?

அப்புறம் ஆர்.எம்.வீ.யை எடுத்துக் கொள்ளுங்கள்! மனுஷன் தமது செல்வாக்கை நிலைநிறுத்திக் கொள்ளப் பார்க்கிறார். ஜெயலலிதாவுக்கு விட்டுக் கொடுக்க மாட்டேனென்று அவ்வப்போது பலப்பரீட்சை நடத்தித் தகராறு பண்ணுகிறார். இப்போது பாருங்கள்! அவருக்கு எம்.எல்.ஸி. பதவியும் போச்சு! மந்திரி பதவியும் அரோகரா! இன்னும் ஆறு மாதங்களில் அவர் தேர்தலில் நின்று ஜெயித்து வந்தால்தான் உண்டு! ஆரம்பத்திலிருந்தே மக்களைச் சந்திக்காமல் மந்திரியாகி மாய்மாலம் பண்ணும் அவருக்கு இதைவிடச் சரியான தண்டனை வேறு என்ன இருக்க முடியும்!






கலைஞர் தமது எதிர்ப்பைத் தெரிவிக்க இனி பொது மேடைகளையோ, நாளிதழ்களையோதான் நாட வேண்டும்! எவ்வளவு பேசி, எழுதி விட முடியும்? மேலவை உறுப்பினருக்கு உரிய உரிமையோடு, அதிகார பூர்வமாக, நாலு மணி நேரம், ஆறு மணி நேரம் என்று பேசி, ஆட்சியின் தில்லுமுல்லுகளைப் பிட்டுப் பிட்டு வைக்க முடியாதல்லவா?

நல்லறிஞர்கள் மேலவையில் இருப்பார்களாம், யோசனைகளைக் கூறுவார்களாம்! சொல்கிறார்கள். மாமேதையான வெண்ணிற ஆடை நிர்மலாவை ஏற்காமல் நிராகரித்த இந்த மேலவை இருந்தால் என்ன, செத்து மடிந்தால் என்ன?

செயல் வீரர்களான எங்கள் மசோதாக்களை விமர்சிக்கின்ற இந்த வாய்ச் சொல் வீரர்கள், தேர்தலில் நின்று வென்று, சட்ட மன்றத்துக்கு வந்து அறிவுரைகளை வழங்கட்டுமே! மக்களைச் சந்திக்கத் தமிழக அறிஞர்களுக்குக் கட்சி பலமோ, பண பலமோ, பொய்யான வாக்குறுதிகளை அள்ளி வீசும் மனப்பக்குவமோ அல்லது குறைந்தபட்சம் ஜாதி அடிப்படையில் வோட்டுக் கேட்கும் திறமையோ இல்லையென்றால் அது அவர்கள் தலையெழுத்து; நாங்கள் என்ன பண்ண முடியும்? ஜனநாயகத்தில் மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறவர்கள்தான் முக்கியம்; அவர்கள் அதிபுத்திசாலிகளாகவும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது என்ன நியாயம்?

அடுத்தாற்போல் பாருங்கள், புரட்சிகரமான இன்னொரு மசோதா சட்டமன்றத்தில் வந்து நிறைவேறும்! அந்தச் சட்டத்தின்படி சட்டமன்றத்தில் எதிர்க்கட்சிகள் ஒழிக்கப்படும்! எதிர்க் கட்சிகள் தேர்தலில் நின்று வெற்றி பெறலாம்; ஆனால் சட்டமன்றத்துக்குள் நுழைய அதிகாரம் இராது! என்ன கேட்கிறீர்கள்? இப்படிப்பட்ட ஒரு சட்டத்துக்கு ஜனாதிபதியின் அங்கீகாரம் கிடைக்குமா என்று? மறுத்துப் பார்க்கட்டுமே! எங்கள் எம்.எல்.ஏ. தாமரைக்கனி கையில் பாட்டிலைக் கொடுத்து டில்லிக்கு ஒரு நடை அனுப்பி வைப்போம்!

எம்.எல்.ஏ. ஹாஸ்டலிலும் ரகுமான்கான் வீடு முன்பும் வித்தை காட்டிய அவர், ஜனாதிபதி மாளிகை முன் ஒரு சக்கர வட்டம் அடித்து, இரும்புக் கழி சுழற்றி, "டாய்! என்னம்மா கண்ணு! என்ன சொல்றே?" என்று மெட்ராஸ் பாஷையில் ஒரு போடு போட்டு, அரிவாளையும் காட்டினார் என்றால் ஜெயில் சிங் அலறி அடித்துக் கொண்டு சட்டத்தை நிறைவேற்றிக் கையெழுத்துப் போட்டுவிட மாட்டாரா!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# மாணவர் தலைவர் மாநில முதல்வர்



• மாணவர் தலைவர்; மாநில முதல்வர்

மாணவர்கள் ஒருங்கிணைந்து ஆறு ஆண்டுகள் ஒற்றுமையாய் ஒரு மிகப் பெரிய போராட்டம் நடத்தி, அரசியல் கட்சி அமைத்து தேர்தலில் நின்று, வெற்றி பெற்று ஆட்சிக்கு வந்து மந்திரி சபை அமைப்ப தென்பது இந்தியாவுக்கு மட்டுமென்ன உல குக்கே ஒரு புதுமையாகத்தான் இருக்கும்.

அந்த உலக மகா அதிசயம் அஸ்ஸாமில் நடந்தது. அவர்கள் பெற்றது அல்ப சொல்ப மான வெற்றி அல்ல. சட்டசபைத் தேர்தலில் பாதிக்கு மேற்பட்ட இடங்களில் மாணவர் கள் ஜெயித்திருக்கிறார்கள். இந்திரா காங் கிரஸ் 25; யு. எம். எப் 17; சுயேச்சை 10 என்று தடுமாறும் போது நிறுவப்பட்டு ஒரே மாதத்தில் அஸ்ஸாம் கண பரிஷத் கட்சி 64 இடங்களில் வெற்றி பெற்றது! கல்லூரி களில் படிக்கும் மாணவர்களுடைய இந்த அபார சாதனைக்குக் காரணங்கள் என்ன வென்று சென்னையில் இருந்து கொண்டே முழுமையாகப் புரிந்து கொள்ள முடியுமா? அஸ்ஸாமுக்கே சென்று நாடி பிடித்துப் பார்த்துவிடலாம் என்று கிளம்பினேன்.

மூன்று பகல் இரண்டு இரவுகள் பயணம். இது தலைநகரான கௌஹாத்தியை அடைய. சிவ ஸாகர், லகிம்பூர் முதலிய இடங் களுக்குப் போய்ப் பார்க்க வேண்டுமானால் இன்னும் பல நாட்கள் ஆகும்.

அஸ்ஸாமுக்குப் புராண காலத்திலிருந்தே பல பெருமைகள் உண்டு. காமரூபம் என்று ஐம்பத்து நான்கு தேசங்களில் மிகவும் புகழ் பெற்றிருந்தது அஸ்ஸாம். பிராக் ஜ்யோதிஷ புரம் என்று அதன் தலைநகரம் பெயர் பெற் றிருந்தது. கௌஹாத்தியில் கிழக்கில் சித்ரா சல மலையில் நவக்ரஹங்களுக்கும் கோவில் இருக்கிறது. சிவலிங்க சொரூபமாகவே ஜோதி ஏற்றி வைத்து வழிபடும் வழக்கம் இன்றும் இருக்கிறது. எனவே கௌஹாத் தியேதான் ப்ராக் ஜ்யோதிஷபுரமாக விளங்கி யது என்று நம்புகிறார்கள்.

பிரம்மபுத்ரா நதிக்கரையில் நீல பர்வதத் தில் அன்னை காமாக்யா வீற்றிருக்கிறாள். அவள் வித்யா பீடத்திலிருந்து அருளாட்சி புரியும் பிரதேசம் அஸ்ஸாம். அருகே உள்ள தீர்த்தம் ஸௌபாக்ய குண்டம் என்று பெயர் பெற்றிருக்கிறது. தசமகா வித்யை களுக்கும் ஆதாரமாக இருக்கும் திவ்ய பூமி. உலகத்திலேயே அதிகமாக மழை பெய்யும் பிரதேசம் இதுவே.

பாரத நாடு சுதந்திரம் பெற்ற போது அஸ்ஸாம் மிகப் பெரிய மாநிலமாக இருந் தது. பிறகு நாகாலாந்து, மேகாலயா, அருண சல் என்று பிரிக்கப்பட்டு விட்டது.

குறுகிப் போன அஸ்ஸாம் மாநிலத்துக்கு மூன்று பொருள்கள் மிக முக்கியமானவை. தேயிலை, தேக்கு, பூமியைக் குடைந்து எடுக்கப்படும் பெட்ரோலியம் எண்ணெய். இம்மூன்றையும் அங்கே மூன்று தங்கங்கள் என்று குறிப்பிடுகிறார்கள். ஆனால், துரதிர்ஷ் டம் என்னவெனில் இந்த மூன்றுமே மத்திய அரசின் உடைமையாக இருந்து வருகிறது. மூன்று பொருள்களுமே அந்நியச் செலா வணியை அபரிமிதமாகப் பெற்றுத்தருபவை. ஆனால் அதில் ஒரு சதவீதம் கூட அஸ்ஸாம் மாநிலத்துக்குக் கிடைப்பதில்லை. நேருஜியின காலத்திலிருந்தே இந்த அநீதி நடந்து வந் திருக்கிறது! இத்தனை முக்கியமான பொருள் களை வழங்கும் மாநிலத்துக்கு வேறு ஏதாவது வகையில் ஈடு செய்தார்களா என்றால் அது வும் இல்லை. மத்திய அரசு அஸ்ஸாமின் பொருளாதார மேம்பாட்டுக்கு ஏதும் செய்ய வில்லை. எனவே தங்கள் மாநிலத்தைப் புறக் கணித்துவிட்டார்கள் என்ற நியாயமான மனக்குறை அஸ்ஸாமியருக்கு இருக்கிறது.

வெள்ளைக்காரர் ஆட்சியில் வங்காளி கள் அஸ்ஸாமில் நிறையக் குடியேறினார்கள். அரசாங்க உத்தியோகங்களிலெல்லாம் வங்காளிகளே அமர்த்தப்பட்டார்கள். அதற்குக் காரணமும் இருந்தது.

சிறந்த பாரம்பரியமும் பண்பாடும் பெற் றிருந்த அஸ்ஸாமியர் ஆங்கிலக் கல்வியை ஏற்க மறுத்தனர். மெக்காலே கல்வி முறை யில் பயிலாதபடியால் இவர்கள் புறக்கணிக் கப்பட்டார்கள். பிரிட்டிஷார் தொடங்கிய பள்ளிகளிலும் வங்காள மொழிதான் கற்பிக் கப்பட்டது. அஸ்ஸாமிய மொழியே பாடத் திட்டத்தில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை! ஒரு வங்கியில் கிளைக் காரியாலயம் தொடங் கினால் ஒரு அஸ்ஸாமியனுக்கு பியூன் வேலை கூடத் தர மாட்டார்கள். தேயிலைத் தோட்டங் களிலும் இப்படியே நடந்தது. இதனையெல் லாம் நொந்து போயிருந்த அஸ்ஸாமிய மக்கள் பாரத நாடு சுதந்திரமடைந்த பின்ன ரும் முன்போலவே புறக்கணிக்கப்படவே



* இந்தச் சாது மிரண்டால் காடு கொள்ளாது! அஸ்ஸாமிய காண்டாமிருகம் போல அம்மாநில மக்களும் பொறுமையும், வலிமையும், மன உறுதியும் கொண்டவர்கள்.

காங்கிரஸ் அரசு இவர்களுக்கு நிலத்தையும் கொடுத்து பிரஜா உரிமையையும் வழங்கி வந்தது. காங்கிரஸ் அரசின் வோட்டு வங்கியாக விளங்கியது இந்தப் புதிய குடியிருப்புக்கள். இவையெல்லாம் அஸ்ஸாமியர் மனத்தில் பயத்தையும், வெறுப்பையும் வளர்த்து வந்தன.

பூபேன் ஹஜாரிகா என்பவர் அஸ்ஸாம் மக்களிடையே அளவற்ற செல்வாக்கு உடைய இசைக் கலைஞர். ''பங்களா' தேஷில் என் பாட்டைக் கேட்கப் பல்லாயிரக்கணக்கில் மக்கள் திரண்டு வருகிறார்கள். ஆனால் எனக்கு அந்நாட்டில் வோட்டுரிமை வழங்குவார்களா?'' என்று கேட்டார் அவர். ''ஒரு பொறுப்புள்ள அரசாங்கம் தானாகவே செய்ய வேண்டிய ஒவ்வொரு' காரியத்துக்கும் அஸ ~ இளைஞர்கள் (AASU என்பது

* அஸ்ஸாம் ஒப்பந்தம் கையெழுத்தாகுமுன் பரிசீலிக்கப்படுகிறது. பிரதமருக்கும் சவானுக்கும் இடப்புறத்தில் அஸ்ஸாம் மாணவர் தலைவர்கள் மஹந்தா, புக்கன் முதலியோர்.

அதிர்ச்சியும், ஆத்திரமும் அடைந்தார்கள்.

கிழக்குப் பாகிஸ்தானிலிருந்தும் தற்போதைய பங்களாதேஷிலிருந்தும் அதிருப்தியுற்றும் அகதிகளாகவும் ஆயிரக்கணக்கான முஸ்லிம் மக்கள் வெளியேறி அஸ்ஸாமில் வந்து குடியேறத் தொடங்கினார்கள். ஆங்காங்கே உள்ள நிலங்களை ஆக்கிரமித்துக் கொண்டார்கள். பழங்குடி மக்கள் வசித்த இடங்களில் அவர்களைச் சுலபத்தில் ஏமாற்றி நிலத்தை மிகக் குறைந்த விலைக்கு வாங்கிக் கொண்டு விடுவார்கள். பிறகு அந்த அப்பாவிப் பழங்குடி மக்களையே அதே நிலத்தில் பாடுபா- வேலைக்கு வைத்துக் கொள்வார்கள்! சில ஆண்டுகளில் வங்காளி முஸ்லிம்கள் நாற்பது லட்சம் ஐம்பது லட்சம் என்று பெருகிவிட்டனர்.

இதற்கு காங்கிரஸ் அரசு ஆதரவு அளித்து வந்ததுதான் ஆச்சரியம். ''நிலம் உங்களுக்கு — வோட்டு எங்களுக்கு'' என்று



* நெல்லி படுகொலைக்குப் பிறகு அங்கு மண்டை ஓடுகள் சிதறிக்கிடக்கும் காட்சி சகஜமாகிவிட்டது.

அகில அஸ்ஸாமிய மாணவர் சங்கம்) போராடத்தான் வேண்டியிருந்தது. பிரும்ம புத்ரா நதிக்கு ஒரு பாலம் வேண்டும் என்று கூடப் போராட வேண்டியிருந்தது. சரியான ரயில் பாதைபோட வேண்டும் என்று போராட்டம். சாலை வேண்டும் என்று போராட்டம். போராடவில்லையானால் எதுவும் நடக்காது என்ற நிலை.

"இப்போது மந்திரி பதவிகள் வகிக்கும் எங்கள் பையன்கள் (பாய்ஸ் என்றுதான் பெரியவர்கள் செல்லமாகக் குறிப்பிடுகிறார்கள்.) அன்று என்ன பாடுபட்டிருக்கிறார்கள் தெரியுமா? ஆறு ஆண்டுகளில் எத்தனை பேர் காணாமல் போனார்கள் தெரியுமா?" என்று கூறும்போதே உணர்ச்சி வசப்பட்டு நாத் தழுதழுத்தார் ஹஜாரிகா.

"பிரதம மந்திரியின் முழு ஆதரவு இப்போது கிடைக்கிறதா?"

"ராஜீவ் காந்தி கண்ணியமானவர். காங்கிரஸ் தேர்தல் பிரசாரத்துக்காக இங்கே வந்திருந்த போது கூட, "எல்லாம் சரியாக நடக்கிறதா?" என்று இவர்களிடம் கேட்டு உறுதிப்படுத்திக் கொண்டார். அவருடைய நல்லெண்ணம் பாராட்டுக்குரியது. ஆனால் மத்திய அரசு மாநில அரசுக்கு எந்த அளவுக்கு ஒத்துழைப்புத் தரும்; இவர்கள் கோரிக்கைகளை எந்த அளவுக்கு நிறைவேற்றி வைக்கும் என்பதெல்லாம் இனிதான் பார்க்க வேண்டும்."

சாதாரணமாகப் பெரியவர்கள்தான் மாணவர்களை அரசியலுக்கு இழுப்பார்கள். ஆனால் அஸ்ஸாமில் மாணவர்களைப் பெரியவர்கள் கேள்வி கேட்காமல் பின்பற்றியிருக்கிறார்கள். 'நம் காலத்தில்தான் ஏமாற்றப்பட்டுவிட்டோம்; நம் குழந்தைகள், பேரன்கள் காலத்திலாவது நிலைமை சீர்திருந்தட்டும்' என்ற எண்ணம் அவர்களை மாணவர்களுக்குப் பூரண ஆதரவு தர உந்தியிருக்கிறது.

நடமாடும் கலைக்களஞ்சியமாக விளங்கும் ப்ரதீப் சாலிஹா அவர்களைச் சந்தித்து அவரிடம் அரசியல் அபிப்பிராயங்களைக் கேட்டபோது, "நான் அரசியல்வாதி அல்ல. ஆனாலும் சொல்கிறேன்" என்று முன் வந்தார்.

"பூமி புத்திரர் வேண்டும் என்ற கொள்கை நாட்டின் ஒற்றுமையை வளர்க்குமா?"

ஒருகணம் யோசித்துவிட்டு நிதானமாகப் பதில் கூறினார் சாலிஹா:

"அஸ்ஸாமியர்களுக்கு வேற்றுமை உணர்ச்சி இருந்ததே கிடையாது. தேச விடுதலைப் போராட்டத்தின் போது அஸ்ஸாமில் பெருந்தலைவராக விளங்கியவர் ஜ்யோதி ப்ரஸாத் அகர்வாலா, அவர் ராஜஸ்தானத்து மார்வாரி. விடுதலை இயக்கத்துக்கு அவருடைய கவிதைகள் உயிர் மூச்சாக இருந்தன. நான் கன்னோசி பிராமணன். இந்த மாநிலத்தில் அஸ்ஸாமிய மொழியையும், கலாசாரத்தையும் தழுவி வாழ்ந்து வருகிறேன். என் குடும்பத்தினர் அஸ்ஸாமிய மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். தேயிலைத் தோட்டங்களில் ஆந்திரர்கள் பல்லாயிரக்கணக்கில் வேலை செய்கிறார்கள். ஒரிஸ்ஸா மாநிலத்திலிருந்து வந்தவர்கள் ஏராளமான பேர் இங்கேயே குடியேறியிருக்கிறார்கள். இவ்வாறு மொத்தம் முப்பத்தைந்து லட்சம் பேர் குடியேறி வாழ்கிறார்கள். அஸ்ஸாமியர் இவர்களையெல்லாம் வெறுக்கவில்லை. இவர்கள் இந்தியர்கள். ஆனால் அயல் நாட்டிலிருந்து வருபவர்களால் அஸ்ஸாமியர் சிறுபான்மையினராகிவிடுகிற அவலத்தை எப்படி, எதற்காகப் பொறுத்துக் கொள்வது? எத்தனையோ அநீதிகளை, மத்திய அரசின் மாற்றாந்தாய் மனப்பான்மைகளை அனுபவித்தோம். ஆனால் அப்போது கூட பிரிவினை வாதம் பேசவில்லை!"

"என்னதான் இருந்தாலும் வன்முறையில் ஈடுபடலாமா?"

ப்ரதீப் சாலிஹா உணர்ச்சிவசப்பட்டுப் போனார். "யார் வன்முறையில் ஈடுபட்டது? ஆஸு இளைஞர்கள் எவ்வளவு கட்டுப்பாட்டுடன் நடந்து கொண்டார்கள் தெரியுமா? போலீஸ் அடக்குமுறைதான் வன்முறைக்குக் காரணம். வாசலில் நடந்தால் விலங்கு. இரண்டு பேர் பேசினால் சிறைவாசம் என்று மாணவர்களை என்ன பாடுபடுத்தினார்கள்! 647 பேர்கள் பலியானார்களே! எத்தனையோ பேர் காணாமல் போனார்களே! அரசாங்கம் தன் குழந்தைகளை இப்படியா நடத்துவது? இவையெல்லாம் வன்முறை இல்லையா?"

"அரசியல் அனுபவம் அற்ற இவர்களால் அரசாங்கத்தைச் சரியாக நடத்த முடியுமா?"

"நிச்சயம் முடியும். எல்லோரும் படித்தவர்கள். புத்திசாலிகள். பிரபுல்ல மஹந்தா நிதானத்துடன் செயல்படுபவன். வன்முறைக்கு ஒருபோதும் ஆதரவு அளித்ததில்லை. ஆறு ஆண்டுகள் பொது மக்களுடைய தொடர்பு இருந்திருக்கிறது. அவர்களுடைய கஷ்டங்களையும், விருப்பு வெறுப்புக்களையும் நன்கு அறிந்தவர்கள்."

ரவீந்திரநாத் பருவா அஸ்ஸாம் டிரிப்யூன் பத்திரிகையின் ஆசிரியர். அவரும் புதிய அரசைப் பற்றி உயர்வாகவே பேசினார்: "மஹந்தா பண்பாடுள்ளவர். புத்தி கூர்மையுள்ளவர். சீக்கிரம் அரசாங்க இயந்திரத்தை இயக்கக் கற்றுக் கொண்டு விடுவார்."

பி. பி. போரா ஆயில் இந்தியா கம்பெனியில் இஞ்ஜினீயராகப் பணிபுரிபவர். பரந்த மனமும் சிறந்த பண்பாடும் உடையவர். அவர் சொன்னார்:

"ஆறு ஆண்டுகள் ஆஸு கிளர்ச்சியை நடத்தினார்களே, ஒரு பஸ் எரிந்ததா? ஒரு கட்டிடம் நாசமாயிற்றா? மிகவும் சாத்வீகமான முறையில்தான் நடத்தினார்கள். மஹந்தாவோ புக்கனோ வன்முறையை ஆதரிக்கவே இல்லை. வன்முறையில் ஈடுபட்டால் தார்மீக பலம் போய்விடும் என்று உணர்ந்திருந்தார்கள்."

"அப்படியானால் நெல்லி கிராமத்தில்

# ∴பாரெக்ஸ்®
# முதன்முதல் தேர்வு!

## ஏனெனில் புதிய மேம்பட்ட ∴பாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக் கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கிய தாகும் ∴பாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கிய மாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-∴பாஸ்∴பரஸ் அடங்கியதாகும் ∴பாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ∴பாரெக்ஸ் கலப் பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




புதிய மேம்பட்ட ∴பாரெக்ஸ்®

பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

CLARION/B/GX/13/203 TMA

நடந்த பயங்கரமான வன்முறைக்கு என்ன காரணம்?''

''சமீப காலத்தில் பங்களாதேஷ் முஸ்லிம்கள் மிக அதிகமாக வந்து குடியேறிய இடம் அது. அத்தனை அந்நியர்களுக்கும் வோட்டுரிமை வழங்கப்பட்டிருந்தது. தங்கள் தலைவிதியை அந்நியர் நிர்ணயிப்பது என்பதை அஸ்ஸாமியர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அங்கு வாழ்ந்த அஸ்ஸாமியப் பழங்குடி மக்கள் கொதித்தெழுந்தார்கள்.''

''வன்முறையை எப்படி நியாயப்படுத்த முடியும்?''

''நாகரிகமானவர்கள் வன்முறையை ஒப்புக்கொள்ள முடியுமா? முடியாதுதான்! ஆனால் 83 ல் நடந்த அந்தச் சம்பவத்துக்குப் பிறகுதானே அஸ்ஸாம் பிரச்னையில் உலகத்தின் கவனம் திரும்பியது? அதன் பிறகுதானே மத்திய அரசும் விழித்துக் கொள்ள ஆரம்பித்தது? இதிலிருந்து என்ன தெரிகிறது? இந்த அளவுக்குப் பிரச்னையை வளரவிடாமல் முன்கூட்டியே தீர்க்கதரிசனத்துடன் மத்திய அரசு நடந்து கொள்ளவில்லை என்பதைத்தான். இன்று ராஜீவ் அரசு செய்திருப்பதை அன்றே இந்திரா ஆட்சி செய்திருந்தால் நெல்லி படுகொலை தவிர்க்கப்பட்டிருக்கும் இல்லையா? பொறுத்துப் பொறுத்துப் பார்த்துக் கடைசியில் அஸ்ஸாமியப் பழங்குடி மக்கள் பொறுமை இழந்தனர். சாது மிரண்டால் காடு கொள்ளாது என்ற கதைதான்!''

''அப்போது நடந்த தேர்தலில் இவர்கள் ஏன் போட்டியிடவில்லை?''

''தேர்தலே தவறு என்றால் அதில் எப்படிக் கலந்து கொள்வது? சமீப காலத்தில் குடியேறிய அந்நியர்களுக்கு வோட்டுரிமை அளிக்கும் தேர்தல் சட்டப்படி எப்படி செல்லுபடியாகும்? அஸ்ஸாமியர் கருத்தைத் தேர்தல் எப்படிப் பிரதிபலிக்கும்? அதனால்தான் கலந்து கொள்ளவில்லை. இவர்கள் நிற்காதபடியால் இ. காங்கிரஸ் பதவிக்கு வந்து ஸைக்கியா மந்திரிசபை நிறுவினர்.''

''அரசாங்கம்தான் வன்முறையைத் தொடங்கியது என்கிறீர்களே! அது சரியா?''

'''ஆயில் ப்ளாக்கேட்' என்று ஒரு போராட்டம் நடந்தது. துலியா ஜான் என்ற இடத்தில் மக்கள் கொடி பிடித்துக் கொண்டு நாள் பூராவும் உட்கார்ந்திருந்தார்கள். ஆயில் இந்தியா தலைமை அலுவலகத்தின் வாசலிலேயே நடந்த சம்பவம். எதிர்ப் பக்கத்தில் போலீஸ் ஸ்டேஷன். திடீரென்று துப்பாக்கிச் சத்தம் கேட்டது! போலீஸார் அமைதியாக இருந்த ஜனங்களைச் சுட்டார்கள்! எதற்காகக் கொன்று குவிக்க வேண்டும்? இங்கு ஒரு ஜாலியன் வாலாபாகே நடந்தது!

''அடிபட்டவர்களை அருகிலுள்ள ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அந்தச் சமயம் பார்த்து ஆயில் இந்தியா உத்தியோகஸ்தர் ஒருவர், மித்ரா என்ற வங்காளி, ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சேர்ந்தார். அவர் போயிருக்கவே கூடாது. தனியாக வேறு போனார். கோபத்தில் கொந்தளித்துக் கொண்டிருந்த மக்கள் அவரை இழுத்து அடித்துக் கொன்று விட்டார்கள்!''

சமீபத்திய தேர்தல் பிரசாரம் பற்றியும் ரசமான ஒரு தகவலைப் போரா சொன்னார்: "என். டி. ஆர். ரொம்ப ஆதரவு கொடுத்தார். நேரிலேயே வந்து பிரசாரம் செய்தார். தேயிலைத் தோட்டத் தொழிலாளிகளின் ஓட்டுக்கள் ஏ. ஜி. பி. க்கு (ஏ. ஜி. பி. என்பது தேர்தலுக்காக ஆஸு மாணவர்களும் மற்ற சில மாநிலக் கட்சிகளும் இணைந்து அமைத்த புதிய கட்சி.) கிடைத்ததற்கு அவர்தான் காரணம். குறைந்த செலவில் போஸ்டர்கள் தயாரித்து வழங்கினார். அவருக்கு இந்த ஊரில் வந்த கூட்டத்தைப் பார்த்துவிட்டுப் பிரதம மந்திரியின் பொதுக் கூட்டத்தையே ரத்து செய்துவிட்டார்கள்!''

போரா முன்கூட்டியே முதன் மந்திரியைக் காண ஏற்பாடு செய்திருந்தார். மிகவும் ஆவலுடன் ஜனதா பவன் சென்றேன். எளிமையான கட்டிடம். ஆடம்பரமே இல்லை. கெடுபிடியும் காணோம். "கல்கியிலிருந்து வந்திருக்கிறேன்'' என்று சொன்ன உடனேயே உள்ளே செல்ல அனுமதிச் சீட்டு கிடைத்தது.






• ஆறு ஆண்டுக் காலம் அஸ்ஸாம் மாநிலத்தை ஆட்டிப் படைத்தவரும், மத்திய அரசின் கண்களில் விரலை விட்டு ஆட்டியவரும், அஸ்ஸாம் மாநிலத்தின் விதியையே மாற்றி அமைத்தவரும், மாணவர் அரசை நிலைநாட்டி சரித்திரம் படைத்தவருமான மஹந்தாவைக் காண ஆர்வத்தோடு காத்திருக்கும் நேரத்தில் அங்குள்ள சில அதிகாரிகள் சில விவரங்களைக் கூறினார்கள்:

''பிரபுல்லகுமார் மஹந்தா முப்பத்திரண்டு வயதே ஆனவர். மிகவும் பொறுமைசாலி. இரவு பதினொரு மணி வரை தினம் கடுமையாக வேலை செய்கிறார். கண்ணியமாக நடந்து கொள்கிறார். சங்கோஜ சுபாவம் உடையவர். அதிகம் பேச மாட்டார். வார்த்தைகளை வைத்து விளையாடும் அரசியல் வாதிகளுக்கிடையே அதிகம் பேசாத ஒரு முதல் மந்திரி!

நௌகாங்க் என்ற ஊரில் கல்லூரியில் படித்தவர். அங்குதான் அவருடைய அரசியல் வாழ்க்கை தொடங்கியது. 1979 ஆம் ஆண்டில் ஆஸுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பல கிளர்ச்சிகளில் ஈடுபட்டுப் பல முறை சிறைவாசம் அனுபவித்தவர். கௌஹாத்தி பல்கலைக்கழகத்தில் சட்டப் படிப்பும் ஜர்னலிஸமும் படித்தவர். முதன் மந்திரியான பிறகு கூட பரீட்சை எழுதினார்.

தாய் தந்தையரிடத்தில் அளவற்ற பாசமும் மரியாதையும் உடையவர். தந்தை தேவகாந்தா பள்ளிக்கூட ஆசிரியர். மந்திரி பதவி பெற்ற பிறகு மகா சங்கராந்தி தினத்தன்று இரவோடிரவாக செக்யூரிட்டிக்கு டிமிக்கிக் கொடுத்துவிட்டு நௌகாங்கில் உள்ள தமது வீட்டுக்குச் சென்றுவிட்டார். தங்கள் வழக்கப்படி பெற்றோரை வணங்கி ஆசி பெற்று மறுநாள் காலை குறித்த நேரத்துக்குத் திரும்பி வந்துவிட்டார்!

கௌஹாத்தியில் சந்தித்த அத்தனை பேரும் மஹந்தாவிடம் பிரியமும் நம்பிக்கையும் வைத்திருக்கிறார்கள். இத்தகைய முதன் மந்திரி வருகிறார் என்பது அங்கிருந்தவர்களின் முகக்குறியிலேயே தெரிந்தது.

முதன் மந்திரியின் அறையில் பிரவேசிக்கும்போதே அங்கு காந்திஜி ராட்டை சுழற்றும் படம் ஒன்று இருப்பதைப் பார்க்கிறோம். பின்னால் பாரத நாட்டின் வரைபடம். ஆடம்பரம் அற்ற சூழ்நிலை.

அஸ்ஸாம் முதன் மந்திரியை ஏறிட்டுப் பார்க்கிறேன். சாந்தம் தவழும் முகம். எளிய தோற்றம். நேரான பார்வை. குறுந்தாடி. புன்னகையா இல்லையா என்று தெரியாத பாவம். கூர்மையான கண்கள். 'இந்த சாதுப் பிள்ளையா மத்திய அரசைக் கலங்க அடித்தார்!' என்று வியப்பாக இருக்கிறது.

என்னை அழைத்துச் சென்ற போரா அறிமுகம் செய்து வைத்தார்:

''ராஜாஜி அவர்களின் கருத்துக்களை எடுத்துக் கூறி வந்த கண்ணியமான பத்திரிகை கல்கி. அவர் இருந்த வரை ராஜாஜியின் குரலாகவே இருந்து வந்தது. நடுநிலைமையோடு எழுதும் வாரப் பத்திரிகை என்று பெயர் பெற்றிருக்கிறது.''

மஹந்தா: ''சந்தோஷம். இவ்வளவு தூரம் நீங்கள் வந்திருப்பதைப் பாராட்டுகிறேன்.''

கேள்வி: ''அஸ்ஸாமில் பலதரப்பட்ட மக்கள் வசிக்கிறார்கள். இவர்களை எப்படி ஒற்றுமையாகச் செயல்படும்படி செய்வீர்கள். இப்பொழுதே ஒற்றுமை குறைந்து வருவது போலத் தோன்றுகிறதே...?''

பதில்: ''எல்லாத் தரப்பு மக்களும் முதலில் இந்தியப் பிரஜைகள். பிறகு அஸ்ஸாமின் புதல்வர்கள். பிறகுதான் தங்கள் தங்கள் வகுப்பைச் சேர்ந்தவர்கள். இதை நாங்கள் நன்றாகவே உணர்ந்திருக்கிறோம். எல்லாத் தரப்பினரது ஒத்துழைப்பும் கிடைக்கும் என்று பூரணமாக நம்புகிறேன்.''

கேள்வி: ''ஆறு ஆண்டுகள் கண்ணை மூடிக் கொண்டு மக்கள் ஆஸுவைப் பின்பற்றியிருக்கிறார்கள். இப்போது நீங்கள் பதவிக்கு வந்த உடனே எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்து விடும் என்று எதிர்பார்க்கிறார்கள். இது உங்களுக்கு கவலையை அளிக்கவில்லையா?''

பதில்: ''அவர்கள் எதிர்பார்ப்புக்கு உயர நான் தீவிரமாக முயற்சி செய்வேன். அது சிரமமாகத்தான் இருக்கும். அஸ்ஸாம் பல காலமாக சுரண்டப்பட்டு வந்திருக்கிறது. மக்கள் ஏமாற்றப்பட்டு வந்திருக்கிறார்கள். முன்னேற்றம் கொஞ்சம் நிதானமாகத்தான் உண்டாகும்.''

கேள்வி: ''நிதி இலாகா, கலாசார இலாகா இரண்டும் உங்களிடம் இருக்கிறதே. பொருளாதார மேம்பாட்டுக்கு என்ன திட்டங்களைச் செயல்படுத்தியிருக்கிறீர்கள்?''

பதில்: ''எங்களுக்கு முன்னால் ஆட்சியிலிருந்த அரசாங்கம் 188 கோடி ரூபாய் பற்றாக்குறை வைத்திருக்கிறார்கள். இந்த நிலையை எப்படிச் சமாளிப்பது என்று யோசித்து வருகிறேன். முதலில் நடந்துள்ள தவறுகளைத் திருத்த வேண்டும்; பிறகுதான் முன்னேற்றம் காண வேண்டும்! ஒரு ஆரம்பமாகச் சிறு தொழில்களுக்கு ஆதரவு கொடுக்கிறோம். கிராமங்களில் குடிசைத் தொழில்களை ஊக்குவிக்கிறோம். வேலை வாய்ப்பைப் பெருக்க வேண்டும். மூடிக் கிடந்த ஆலைகளைத் திறந்து இயங்கச் செய்திருக்கிறோம். அசோகா பேப்பர் மில்ஸ், ஸில்காட்டில் உள்ள சணல் தொழிற்சாலை இவை இயங்கத் தொடங்கிவிட்டன.

கேள்வி: ''கனரகத் தொழில்களை ஊக்குவிப்பது நல்லதல்லவா?''

பதில்: ''அஸ்ஸாமில் போக்குவரத்து வசதிகள் கிடையாது. வெளி மாநிலங்களிலிருந்து பொருள்களைத் தருவித்து இங்கே தொழில் நடத்துவது சிரம சாத்தியம். உள்நாட்டில் கிடைக்கும் பொருள்களை வைத்தேதான் தொழில் துறையில் முன்னேற்றம் காண வேண்டும். அதுதான் துரிதமான பொருளாதார முன்னேற்றத்துக்கும் அதிகபட்ச வேலை வாய்ப்புக்கும் உதவும்.''

(அடுத்த இதழில் முடியும்)

கட்டுரை, பேட்டி: **ஆனந்தி**

மேலட்டை வண்ணப்படம்: **தீபக் பெஸ்பருவா.**

வெற்றி பெற்ற அந்த பொன்னுன வேளையில்.......



லலிதாஸ்.
மாசுமருவற்ற தங்கத்தரத்திற்கு,
அகில உலக ரீதியில்
முதல் பரிசு பெற்றவர்கள்.

ஸ்பெயின் நாட்டின் தலைநகரான மாட்ரிட் என்ற நகரில் 1983 மற்றும் 84ஆம் ஆண்டுகளில் நடந்த போட்டியில் மாசு மருவற்ற தங்கத்தரத்திற்கு முதல் பரிசு பெற்றவர்கள் லலிதாஸ். ஒன்றல்ல இரண்டல்ல, உலக அரங்கில் 163 நாடுகளிலிருந்து தலை சிறந்த தங்கநகை தயாரிப்பாளர்கள் இப்போட்டியில் கலந்து கொண்டார்கள். இந்த மாசுமருவற்ற தங்கத்தரத்தைக் கடந்த 35 வருடங்களாக மேற்கொண்டதாலேயே லலிதாவிற்கு, இலங்கையில் ஒரு ஆஸ்தான ஸ்தானம் தேடிவந்துள்ளது. இலங்கை வங்கிகளுக்கான, அரசு அங்கீகாரம் பெற்ற தங்கத்தர நிர்ணயாளர்கள் என்ற இந்த ஸ்தானத்தை 1975லிருந்து லலிதாஸ் தனதாக்கிக் கொண்டுள்ளது.

முதன்மையானவர்கள் என்ற இந்த ஸ்தானத்தையுடைய லலிதாவின் நகைகளை ஆசியாவிலேயே மிகப் பெரிய ஷோரூமில் காணலாம். ஆம், லலிதாவின் இந்தத் தங்கத்தர்பார் கொழும்புவின் முக்கிய வீதியில் அமைந்திருக்கிறது. அங்குள்ள ஆயிரக்கணக்கான நகைகள் ஒவ்வொன்றும் உங்கள் அழகுக்கு ஓர் ஆராதனையாக விளங்கக் கூடியக் கலைப்படைப்புகள்.

இப்பொழுது லலிதாஸ் உங்களுக்கு அளிப்பது 2500க்கும் மேற்பட்ட ஈடு இணையில்லாத தங்க, வைர மற்றும் வெள்ளி நகைகள். கலைக்கண்ணோடு நுண்ணிய வடிவுகளில் பிறந்துள்ள ஒவ்வொன்றும் எழு இறன் வாய்ந்த கலைஞர் குழுக்களின் மணிக்கணக்கான நாட்கணக்கான உழைப்பின் பிறப்புகளே.

மேலும் இவற்றைக்காண...... உங்களைக் கடல் கடந்து இலங்கைக்குச் செல்ல வேண்டும் என்று கூறவில்லை.




இப்பொழுது இங்கு சென்னையிலேயே.

**லலிதா ஜுவல்லரி மார்ட்**

123 உஸ்மான் ரோடு, பனகல் பார்க்,
தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 445939, 442601.

Vividize 228




**4**

(புளியோதரை, வெங்காய சாம்பார், பிரிஞ்சி குருமா, மீன் குழம்பு போன்ற பண்டங்களின் வாசனைகள் சமத்துவமாகப் பின்னிக் கிடக்கும் லஞ்ச் ஹாலில் சாம்பசிவம் சுரத்தில்லாமல் உட்கார்ந்திருக்க, பாண்டியன் நுழைகிறான்.)

பாண்டி: என்ன சார், கிண்டி, ஊட்டியெல்லாம் இனிமே நெஜமாவே அவ்வளவுதானா? கவலைப்படாதீங்க சார். ஏதோ ரேஸ் குழம்பாம், ஊட்லே செஞ்சு அனுப்பியிருக்காங்க. அதையாவும் சாப்பிடறீங்களா?

சாம்ப: அடப் போய்யா, நானே குழம்பிண்டு இருக்கேன், நீ வேற...

பாண்டி: என்ன குழப்பம் சார்? ரேஸ் இல்லேன்னு அந்தக் குதிரைங்களை என்ன செய்வாங்கன்னு? அந்த மைதானத்திலே தானே எம். எல். ஏக்களுக்குக் கட்டடம் கட்டப் போறாங்களாம்? ஒவ்வொரு எம். எல். ஏ.வும் குதிரை மேல ஏறி டக்டக்குன்னு கோட்டைக்கு வேகமா ஜம்முனு போகலா ம். இனிமே அட்டெண்டென்ஸ் போனஸ்ஸு ரு குடுக்கப் போறாங்களாம். கரெக்டா போக வேணுமா?

சாம்ப: ஆ சும்மா இருக்க மாட்டே? என் வயிறு ரஷ்ய அணு ஆலை மாதிரி பத்திண்டு எரியுது... நீ வேற...

பாண்டி: சார், ரஷ்யா மாதிரியே ரொம்ப ரகசியமா எல்லாத்தையும் வெச்சிருந்தா எப்படி? நம்ப ஜி. எம். சார்தான் கூடாரத்துலே உட்காரப் போறதா சொல்லிட்டு இருக்காரு... நீங்க எப்படி, இரும்புத்திரை போட்டுக்கப் போறீங்களா?

சாம்ப: கொஞ்சம் சும்மா இருக்க மாட்டே? விஷயமே வேற. நம்ம ரகுவீரைப் பத்தி என்கொயரி பண்ண ஒருத்தர் வந்து சேர்ந்தாரு...

பாண்டி: எதுக்காக?

சாம்ப: எதுக்காகவா? பொண்ணு குடுக்கத்தான். கையிலே கொடை எடுத்துண்டு வயசானவரா இருந்தாரு. கதர் டிரஸ் வேறே... எங்கேயோ கொடவாசலாம் அவர் சொந்த ஊர்...

பாண்டி: நம்ம ரகுவீரைப் பத்தித்தானே? நல்ல சர்டிபிகேட் குடுக்க வேண்டியது தானே?

சாம்ப: போடா இடியட்! குடுத்தா அவர் பொண்ணுக்குக் கல்யாணம் பண்ணி வெச்சுடுவாரே! அப்புறம் நம்ம சுசிலா கதி?

பாண்டி: (அவசரமாக) தப்பு... தப்பு... சே,




# நாடகம்

சமயத்திலே என் மூளை நம்ப ஆபீஸ் டெலிபோன் மாதிரி வேலை செய்யாம கழுத்தறுக்கறது. ஆமா, என்ன சார் சொன்னீங்க?

சாம்ப: ரகுவீர் ஒரு குடிகாரன். ஸ்த்ரீ லோலன். ஆபீஸ் பணத்தைக் கையாடி கஞ்சா அடிக்கிறவன். அப்படி இப்படீன்னு வத்தி வெச்சேன். ஆனா இந்த செட்டப் பைப் பத்தித் தெரியாத சுசிலா காதில அது விழுந்து, என்னை ஜெயலலிதா வீரப்பனைப் பார்க்கறது போல முறைக்குது.

பாண்டி: அதான் சார் டல்லா?... அட, இதோ ஜி. எம். வராரே...

ராகவா: (வந்து உட்கார்ந்து) அப்பனே, ஏரி காத்த ராமா... என்னைக் கேட்டா எவன் ஒருத்தன் தினம் கார்த்தாலே எழுந்து பழைய சாதத்திலே தயிர் விட்டுண்டு மாங்காயோட சாப்பிடறானோ அவன் நாள் பூரா டல்லா ஆகவே முடியாது....

பாண்டி: போங்க சார்... நீங்களும் ரகுவீரும் சேர்ந்து எங்க சாப்பாட்டிலே கைவெச்சுட்டீங்களே. நிர்மலாவை அநியாயமா சந்தேகப்பட்டு ஒரு வாரம் நிப்பாட்டிட்டமே...

ராகவா: (தலையை ஆட்டி) அதெல்லாம் அப்படிச் செய்தால்தான் சரி. நிர்மலா, மாடசாமியோட ஆள். அவளைக் கல்யாணம் பண்ணிக்கிறதா வாக்கு குடுத்து இருக்கான். அவகிட்ட, நீ, ஆனந்த், சிவராமன் எல்லாம் இளிச்சா அவனுக்குப் பத்திண்டு வராதா? அதனாலதான் இப்போ எல்லோரும் பயப்படறவெடிகுண்டைத்தூக்கிப்போட்டோம்...

சாம்ப: அப்போ நிர்மலாவுக்கு எய்ட்ஸ் கிடையாதா?

ராகவா: ஒரு எழவும் கிடையாது. சும்மா ஒரு பாச்சா. அமைச்சர்லேந்து எல்லாரும் நடுங்கற விஷயமாச்சே. இவங்களெல்லாம் சுண்டைக்காய்.

பாண்டி: ச்சே... ஆனாலும் நீங்க சுத்த மோசம் சார்... இப்போ நிர்மலாவைப் பாத்தாலே வயத்திலே புளியைக் கரைக்குது.

ராகவா: போடா போக்கத்தப் பசங்களா... ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா பகவத் கீதையிலே என்ன சொல்றார்னா...

(மைதிலி வருகிறாள்.)

மைதிலி: எல்லாம்சொல்லியிருக்கார்... ஆனா உடம்பு இளைக்கறதுக்கு மாத்திரம் ஒரு ஸ்லோகம் கூடச் சொல்லலே...

ராகவா: என்ன மைதிலி, உனக்கு இது ஒரு அப்செஷன் ஆயிடுத்து. ஒண்ணு செய்யேன். என்னப்பன் குருவாயூரப்பனுக்கு எடைக்கு எடை ஏதாவது குடுக்கறதா வேண்டிக் கோயேன்?

பாண்டி: இப்பவேவா, இல்லாட்டி இளைச்சதுக்கு அப்புறமா?

சாம்ப: அது ஒரு வெய்ட்டி கொஸ்சின். அடுத்தது என்ன குடுக்கறதுன்னு...

பாண்டி: (கேலியாக) நாணயமா குடுத்தா குருவாயூரப்பனுக்கு நல்ல வருமானமா அமையும்.

மைதிலி: ம்... பாண்டியன் அவர்கிட்டே இல்லாத ஒண்ணை மத்தவர் குடுக்கச் சொல்றார்.

பாண்டி: என்னது, என்கிட்டயா நாணயம்

## வெள்ளி சந்தனப் பேலா பரிசு!



நினைவூட்டுகிறோம்!

லஞ்ச் டைம் தொடரைக் கவனமாகப் படிப்பதுடன் பத்திரப்படுத்தியும் வைத்திருங்கள்!

12 வது கடைசி அத்தியாயத்தில் நீங்கள் பங்கேற்க ஒரு போட்டி அறிவிக்கப்படும்!

பரிசு: வெள்ளி சந்தனப் பேலா!

ஆறுதல் பரிசுகளும் உண்டு!

---

இல்லே? இன்சல்ட்... இன்சல்ட்...

(ஆனந்த் வருகிறான்)

ஆனந்த்: எதுப்பா இன்சல்ட்? பதினொரு பேர் யார்ன்னு சொல்லாம நம்ம முதலமைச்சர் பயமுறுத்திண்டு இருக்காரே, அதா?

சாம்ப: ஆமா, ராகவாச்சாரி சார், நெஜமாவே பதினொரு மினிஸ்டர்கள் வெளியே வந்தா அவங்க என்ன செய்வாங்க?

ராகவா: ம்...? டீம் ஒண்ணு ஆரம்பிச்சு கிரிக்கெட் ஆடலாம், புதுசா சேரப்போற பதினொரு மந்திரிங்களோட... மட்டையை வீச கோச்சிங் தாமரைக்கனி...

(மாடசாமி வருகிறான்.)

ஆனந்த்: என்னப்பா மாடசாமி, எம். டி. பொண்ணு கல்யாணத்துலே ஏதோ தமாஷா நடந்துதுன்னியே, சொல்லேன்?

மாடசாமி: அதுவா சார்? நாலாவது பந்தியிலே, எம்.டி.க்கு மாமாவாம்—குண்டா இருந்தாரு நம்ம உசிலைமணிக்கு தோஸ்த்தா. எலையிலே உக்காந்து ரொம்ப எகிறிக்கினு சாப்பாடு போடறவங்களை வெரட்டிக்கினு இருந்தப்போ, கையிலே சுமார் பதினைஞ்சு ஆளுங்க சாப்பிடற சாதத்தோட வந்த ஹெட்குக்குக்குக் கோவம் வந்துருச்சு. அப்படியே அத்தனை சாதத்தையும் அவர் இலையிலே போட்டுட்டார்!

சாம்ப: அடப்பாவமே! அப்புறம் எம். டி. யோட மாமா என்ன செஞ்சார்?

மாடசாமி: ஒரு பருக்கை விடாம சாப்டுக் காமிச்சார் சார். சமையக்காரர் அசந்துட்டார்.

ராகவா: அந்தக் குடும்பத்தோட விசேஷம், எல்லாருக்கும் உடம்பு பூரா வயிறு. பூர்வாசிரமத்திலே அரசியல்வாதியாகவோ, காண்டிராக்டராகவோ இருந்திருக்கணும்.

மாடசாமி:, சார், ஆபீஸிலே இன்னிக்குத் தண்ணி வரலை. எல்லாருக்கும் ஒரு கிளாஸ் தண்ணி தான்.

ஆனந்த்: ஏம்பா, அடுத்த கிளாசுக்குத் தெலுங்கு கங்கா வர்ற வரைக்கும் வெயிட் பண்ணணுமா?

பாண்டு: அது எந்த ஜென்மத்துக்கு வரப் போகுதோ? எல்லாம் ஒரே பேச்சா இருந்துண்டிருக்கு... ஆந்திரா சீஃப் மினிஸ்டரோட இனிஷியலே பயம் காட்டுது.

ஆனந்த்: எப்படி பிரதர்?

பாண்டு: என். டி. ஆர். — அதாவது நோ டெலுகு ரிவர்...

ராகவா: அவர் சத்குரு தியாகய்யருக்கேகூட தராபாத்திலே சிலை வைக்கக் கூடாதுன்னு சொல்லியிருக்காரே? ஏன்னு கேட்டா, தெலுங்கு குடும்பத்துலே பொறந்து தெலுங்கிலே கீர்த்தனைகளை இயற்றியிருந்தாலும், அவர் தமிழ்நாட்டிலே வாழ்ந்த பாவத்தைச் செஞ்சிருந்தாராம்...

சாம்ப: நம்ம அரசியல்வாதிங்க வாயைத் திறக்க ஆரம்பிச்ச உடனேயே மத்த அம்சங்கள் அடங்கிப் போயிடுது பாத்தீங்களா?

(முத்து வருகிறான்.)

முத்து: சார், இன்னிக்கு காலைலேந்து சகுனம் சரியா இல்லே சார். கடையிலே நான் வாங்கின கல்கியிலே ரெண்டு அட்டை 'பின்' ஆகியிருந்துது. வாழைப்பழம் வாங்கினு இரட்டையா ஒட்டிண்டு இருந்துது. பயமா இருக்கு...

ராகவா: இதிலே என்ன பயம்?

முத்து: வீட்டிலே பிரசவ டயம் சார். அட்மிட் பண்ணியிருக்கேன். ரெட்டையா பொறக்குமோன்னு பயமா இருக்கு.

சாம்ப: கவலைப்படாதே, ரெட்டையா பொறக்காது. முதல் பிரசவத்துலே ஒரு குழந்தை. இரண்டாவதிலே இரண்டு; இது மூணாவது பிரசவமானதாலே மூணு பொறக்கும்.

முத்து: (பதற்றத்துடன்) சார்... சார்...

(சுசிலா வருகிறாள்.)

சுசிலா: மிஸ்டர் சாம்பசிவம், நீங்கதான் ரகுவீரைப் பத்தி இல்லாததையும் பொல்லாததையும் வந்தவர்கிட்டே சொல்லி வெச்சீங்களா?

சாம்ப: சுசிலா... ஒன் மினிட்.

சுசிலா: ஏன் சார் உங்களுக்கு இப்படி ஒரு கெட்ட எண்ணம்? வந்தவர் யார் தெரியுமா?

சாம்ப: யார்...? யார்...?

சுசிலா: எம். டி. யோட தூரத்து உறவாம். உங்களைப் பார்த்தப்புறம் எம். டி. வீட்டுக்குப் போய்ப் பேசிண்டிருந்தாராம்.

சாம்ப: ஐயையோ... அப்படியா? ரகுவீர் எங்கே இப்போ?

சுசிலா: ஒரு மணியா எம். டி. ரூம்லே இருக்கார். அவர் கதி என்ன ஆகப்போறதோ? ஏன் சார் இப்பிடி செஞ்சீங்க?

சாம்ப: மாடசாமி... ஒரு கிளாஸ் தண்ணி... ஒரு கிளாஸ் தண்ணி... சீக்கிரம்...

மாடசாமி: எதிலேந்து வேணும் சார் — புழலேரித் தண்ணியா, தெலுங்கு கங்கா தண்ணியா?

(தொடரும்)

அனுராதா ரமணன் **7**



# நெருப்பாக




இன்பாவும் நந்தகுமாரும் கிராமத்தைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பிப் போய் வெகு நேரம் வரையிலும் — லோகநாதனின் மனத்தில் அந்த வார்த்தை உறுத்துகிறது.

டாக்டர் கேசவ் — அவரெதிரில் வந்து உட்கார்ந்தவுடன், இதைப் பற்றித்தான் சொல்கிறார்.

"கெக்கெக்கே..."

டாக்டர், தொந்தி குலுங்கச் சிரிக்கிறார்.

"பெரிய ஜமீன் பரம்பரையில் வந்த மிஸ்டர் லோகநாதன், சுத்து வட்டாரக் கிராமங்களை இன்னமும் தன் கால்கட்டை விரலடியில் போட்டு அழுத்தி வெச்சிட்டிருக்கிற பெரிய மனுஷன்... போயும் போயும் அந்த உழக்குப் பொண்ணு சொன்னதுக்காகவா கவலைப்படறீங்க?"

"அவ வெறும் உழக்கு இல்லே கேசவ்... என்னை அளக்க வந்திருக்கிறவ... என் வருங்கால மருமக..."

"இது எப்ப எடுத்த முடிவு?"

டாக்டர், ஆச்சரியத்துடன் அவரைப் பார்க்கிறார்.

"பார்த்தீங்களா.. சின்னதா ஜலதோஷம் பிடிச்சாக் கூட, எனக்கு போன் போட்டு வரவழைப்பீங்க... கல்யாண விஷயத்தைக் கமுக்கமா வெச்சுட்டீங்களே!"

லோகநாதனுக்கு, அவர் அப்படிக் கேட்டது என்னவோ போல் இருந்திருக்க வேண்டும். அவசரமாய் மறுக்கிறார்...

"நீங்க நினைக்கிற மாதிரி, சொல்லக் கூடாதுங்கற எண்ணமெல்லாம் கிடையாது. கேசவ். நந்துவுக்கு இவ மேல ஒரு லைக்கிங் இருக்கிறதா தெரியறது... இந்தக் காலத்துல, பசங்க மனசுக்கேத்தபடி நாம வளைஞ்சு கொடுக்கறதுதான் நல்லது... எனக்கு இருக்கிறதும் இவன் ஒருத்தன்தானே...?"

"அதனாலதான் சொல்றேன்... செலக்ட் பண்றதுக்கு முன்னாடி ஒரு தடவைக்குப் பத்து தடவை யோசிங்க்... வம்சமே ரெண்டு பெண்டாட்டி வம்சம்னு நாளைக்கு, ஊர் உலகம் சொல்லக் கூடாது பாருங்க... பட்டணத்துப் பொண்ணு... டிரஸ்ஸைப் பார்த்தீங்க இல்லே? நாளைக்கு இந்தப் பங்களாவுல வியாதிக்கார மாமியாரையும், பைத்தியக்கார மச்சினனையும் அனுசரிச்சிட்டுப் போவாளான்னு யோசிங்க..."

லோகநாதன் விறைத்து நிற்கிறார்.

இத்தனை வருஷ வாழ்க்கையில் — என்னதான் அவரைக் கண்டு ஊர் மக்கள் பயத்துடன் மரியாதை செலுத்தினாலும், அவரைப் பயப்பட வைக்கவும் இரண்டு ஆத்மாக்கள் இருக்கத்தான் இருக்கிறார்கள்.

ஒருத்தர் ஸ்டேஷன் மாஸ்டர்... இந்தக் குடும்பத்தின் அங்கத்தினர்களுடைய ஜாதகமே அவர் கையில்... இதோ, சாயந்திரமானால் வந்துவிடுவார்.

இன்னொருத்தர் இந்த டாக்டர்...

ஜோஸியருக்கும், வைத்தியருக்கும் பிரும்ம ராட்சஸன் கூட நடுங்கும்... கேவலம், லோகநாதன் நடுங்கக் கேட்பானேன்?

லோகநாதனுக்கு நன்ருக நினைவிருக்கிறது... டாக்டர் கேசவ்வை முதன் முதலாகச் சந்தித்தது...

ஜமீனுக்குச் சொந்தமான மாந்தோப்பில் ஒரு சிறுவன் மாங்காய் திருடி விட்டான். வாட்ச்மேன், சிறுவனைக் குண்டுக் கட்டாகக் கட்டி, ஜமீன் மாளிகையில் கொண்டு வந்து நிறுத்தி விட்டான்.

அப்போதுதான் லோகநாதன் மூத்தவள் மங்களாம்பாளை மணந்த புதுசு.

இளரத்தம். புதுப் பெண்டாட்டி. எதிரே நின்றவனே சின்னப் பையன்.

கையில் எடுத்த சவுக்கை, சிறுவன் மயக்க முற்றுக் கீழே விழும் வரையில் வைக்க வில்லை லோகநாதன். புகுந்து விளையாடி விட்டார்.

கீற்றுக் கீற்ருக ரத்தம்! இதோ — கூடத்துச் சுவரில் வரிசையாக ஜமீன் பரம்பரையில் வந்த — லோகநாதனின் தாத்தா, பாட்டி மங்களாம்பாளின் அப்பா, அம்மா, தாத்தாவுக்குத் தாத்தா — இவர்களின் ஓவியங்கள் மாட்டியிருக்கிறதே... இந்த ஓவியங்களின் மீதெல்லாம் சவுக்கு நுனியின் ரத்தச் சிவப்பு விசிறல் படிந்தது.

துளசி மாடத்தில் விளக்கேற்றி, வலம் வந்து கொண்டிருந்த மங்களாம்பாள் பதறியடித்துக் கொண்டு ஓடி வந்தாள்...

ஆனல் அவள் வருவதற்குள் காரியம் மிஞ்சி விட்டது. பையன் கட்டையோடு கட்டையாகக் கிடந்தான்.

அந்த நாளில் — டாக்டர் கேசவ், பக்கத்து டவுனில் ஈ ஓட்டிக் கொண்டிருந்தார்.

பத்தடிக்குப் பத்தடி அறை. அதன் வாசலில் மர ஸ்கிரீன்... நாலு உடைந்த நாற்காலிகள்.

உள்ளே, இவர்தான் கம்பவுண்டர், இவரே தான் டாக்டர்...

ஒரு நாளைக்கு இரண்டு ரூபாய் வந்தால் பெரிசு...

மாங்காய் திருடிய சிறுவனுக்கு வைத்தியம் பார்ப்பதற்காக, அவர் ஜமீன் மாளிகைக்குள் அடியெடுத்து வைத்த நேரத்தில், எங்கோ ஒளிந்து கொண்டிருந்த அதிர்ஷ்டத் தேவதை 'களுக்'கெனச் சிரித்தாள்...

பையனுக்கு மருந்து போட்டு, அதே மாளிகையில் ரகசியமாய் வைத்து வைத்தியம் பார்த்ததோடு டாக்டர் கேசவ்வின் பணி முடியவில்லை.

சிறுவன் தேறி எழுந்து, வீட்டில் போய் நடந்ததை எல்லாம் சொல்லி விட்டால்...

ஆணைப்பட்ட லோகநாதன் கூட, போலீசுக்குப் பயந்தார். அவமானத்துக்குப் பயந்தார்.

இந்தப் பையன் வாயாலேயோ, சைகையாலேயோ விஷயம் வெளியில் வரப்படாது உமக்கு... அவ்வளவுதானே? இந்தத் தூக்கடாவுக்கெல்லாம் கவலைப்பட்டா எப்படி?''

டாக்டர் கேசவ்வின் ஆறுதல் மொழிகளுக்கு அன்று லட்ச ரூபாய் கொடுக்கலாம் போலத் தோன்றியது லோகநாதனுக்கு.

சிறுவன் பிழைத்தெழுந்தான். ஆனல், நாக்கும், ஒரு பக்க கைகாலும் இழுத்துவிட்



டது. கோணல் பார்வை... அப்பா, அம்மாவைக்கூட அடையாளம் தெரியாத அளவுக்கு மூளையில் மந்தம்...

சரியாய் ஒரு மாதம் கழித்துப் பெற்றோரிடம் ஒப்படைக்கப்பட்டான் அவன்.

லோகநாதன் வேட்டையாடப் போன பக்கத்துக் காட்டுக்குள் புலி அடித்து விழுந்து கிடந்தவனை, தூக்கி வந்து சிகிச்சையளித்ததாகச் சொன்னதை, டாக்டர் ஆமோதித்தார்.

அடுத்த நிமிஷமே — தமது சட்டைப் பைகளைப் பெரிசாய் மாற்றித் தைத்துக் கொண்டார்...



அன்று முதல் — இன்று வரையில், கேசவ் விற்கு அந்தக் குடும்பத்தின் சகல விஷயங் களிலும் மூக்கை நுழைக்க உரிமை உண்டு...

அவரை மதிக்காதவள் ஒருத்தி இருந்தா ளென்றால்... அது மங்களாம்பாள்தான்.

புருஷனிடம் அவள் அதிகம் ஒட்டாமல் போனதும் இந்தச் சம்பவத்துக்குப் பிறகு தான்.

இரவு முழுக்கத் தூக்கம் வராமல் தவிப் பாள்... லோகநாதன், அவளை அருகே இழுத்துக் கொஞ்சினால், முள் மேல் நிற்பது போல் தவிப்பாள்... அவரது விருப்பத் துக்கு முழு ஒத்துழைப்பும் தர மாட்டாள்...

''இன்னிக்கு வேண்டாங்க...''

''ஏன்?''

''புத்த பௌர்ணமி...''

''நீ, என்னை விட்டு விலகிட்டே வர்றே...''

''சேச்சே, அப்படியெல்லாம் எதுவுமே இல்லே. மனசு என்னமோ சங்கடமா இருக்கு...''

''ஏன், என் கையை நகர்த்தி, நகர்த்தி விடறே?''

''ஏதோ வீச்சம் வர்றாப்பல இருக்கு... ரத்த வீச்சம்...''

''ஹஹ்... பைத்தியம்.,... வேட்டைக்குப் போயிட்டு வந்து, சந்தனச் சோப்பு தேய்ச்சுக் குளிச்சுட்டுத்தானே படுக்கையறைக்குள் ளேயே நுழையறேன்... உனக்கு வீண் கற் பனை...''

அவள், அந்த நேரத்துக்குச் சும்மாயிருப் பாள். அவ்வளவுதான்.

மறுநாள் பார்த்தால் வீட்டு வாசலில் வரிசையாய் ஏழைச் சிறுவர்கள் முண்டி யடித்துக் கொண்டு நிற்பார்கள்.

மங்களாம்பாள் பெரிய பாத்திரங்களில், சாம்பார் சாதமும், தயிர் சாதமுமாய்க் கலந்து எடுத்து வந்து — ஒவ்வொரு குழந்தைக்கும் பெரிய உருண்டைகளாகப் பிடித்துப் பிடித் துப் போடுவாள்.

''என்ன மங்களா இது...?''

''சொத்து முழுக்க வித்துச் சோத்தை வடிச்சு, இவங்களுக்கெல்லாம் போட்டாக் கூட, என் மனசு ஆறுது போல இருக்கே... நான் என்ன செய்வேங்க...?''

கிட்டத்தட்ட பத்து வருடங்கள் போல, இந்த மங்களாம்பாளுடன் — இதே ரீதியில் வாழ்ந்திருப்பாரா லோகநாதன்... இருக்கும்.

நடுவில் குழந்தை இல்லையே என்று இரண்டு தடவை புத்திர காமேஷ்டி யாகம்... ஸ்டேஷன் மாஸ்டருக்குச் சொந்த ஊர் இது தான்... அவரை எந்த ஊருக்கு மாற்றல் செய்தாலும், யார் காலையாவதும் பிடித்து, மறுபடியும் இங்கே வந்துவிடுவார். அவர் தான் யாகத்துக்கும் ஹோமத்துக்கும் பிர தான குரு...

''தங்கத்துல கிருஷ்ண விக்கிரகம் செய்து, தானம் கொடுங்கோ...''

''தம்பதி பூஜை செய்யுங்கோ... பட்டுப் புடைவை, பட்டு வேஷ்டி,... அந்த அம்மா ளுக்குத் திருமாங்கல்யம்... வாங்கித் தாங்கோ... குறைவே வராது!''

''காராம் பசுவை, கன்றுக்குட்டியோட தானம் பண்ணணும்... இதெல்லாம் பூர்வ ஜென்ம கர்மா... தவிர சர்ப்ப தோஷம் வேற உங்க சம்சாரத்துக்கு இருக்காக்கும்!''

எத்தனை எத்தனை...

டாக்டர் கேசவ், தனக்குத் தெரிந்த லேடி டாக்டர்கள் இருவரை அழைத்து வந்து, ஆறு மாதம் போல — இந்தப் பங்களாவில் தங்க வைத்து, அவர்களுக்குத் தன்னாலான வசதிகளைப் பெருக்கித் தந்தார்...

''யூட்ரஸ் ரொம்ப வீக்காயிருக்கு...''

''ஐ திங்க்... அவங்களோட ஹார் மோன்ஸ் சுரப்பு அத்தனை திருப்திகரமா இல்லே...''

''டாக்டர் மல்லிகா சொல்றாங்க... அவங்க ஒரு நாலு மாசம் வரைக்குமாவது ரெஸ்ட்டுல இருக்கணும்னு...''

மங்களாம்பாள் முகத்தை இரு கைகளா லும் மூடிக் கொண்டு விம்மினாள்.

''என்னால முடியலே... உங்களுக்காக ஒரு குழந்தையைப் பெத்துக் குடுக்கணும்னுதான் ஆசைப்படறேன்... ஆனா... ஆனா... உங்க சந்தோஷத்துல மனசு ஒன்ற முடியலே... எங்கேயிருந்தோ அந்தப் பையனோட முகம் கண்ணு முன்னாடி வந்து நிக்கறது... 'ஐயோ ஐயோ'ன்னு வயிறு எரியறது... அந்த எரிச்சல் தாங்காம என் தேகமே பொசுங்கி, புகை நாத்தம் வீசற மாதிரி இருக்கறப்ப... என் வயித்துல எப்படி ஒரு சிசு வளர முடி யும்...? எத்தனை பூஜை பண்ணினாலும், எத்தனை ஆபரேஷன் பண்ணினாலும் இந்த நினைப்பை மாத்த முடியலேயே!''

லோகநாதன் பிரமித்து நின்றார்.

டாக்டர் கேசவ்தான் அந்த நேரத்தில் அவருக்குத் துணை...

''எல்லாம் காலப் போக்குல சரியாகும்... சாப்பாடும் தூக்கமும் ஒரு மனுஷனோட துக் கத்தை மறக்கக் கடவுள் கொடுத்த வரப்பிர சாதங்கள்... டேக் இட் ஈஸி...''

அவர், ஜமீன்தாரின் இரட்டைக் குதிரை பூட்டிய சாரட்டில் அவருடன் சரிசமமாய் அமர்ந்து டவுனுக்குப் போவார்... சினிமா பார்ப்பார்... பெங்களூர் ரேசுக்குத் தவறாமல் போவார்... சென்னையிலுள்ள நடன மணி களையும், நாடகக் கம்பெனிகளையும் கிராமத் துக்கு வரவழைத்து நிகழ்ச்சிகளை நடத்து வார்...

அப்படி வந்த நாடகக் குழுவில் ஒருத்தி தான் இந்தப் புவனா...

வள்ளியாகப் பாத்திரமேற்றுத் தினைப் புனங்களைக் காக்க, மூங்கில் பரண் மீது ஏறி நின்று அவள் ஆலோலம் பாடிய போது...

லோகநாதன், தன்னை சாட்சாத் முருகப் பெருமானாக நினைத்துக் கொண்டாரென் றால்...

அது மிகையேயில்லை!

(தொடரும்)

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




## 23

**மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்**

| | |
|---|---|
| புரதம் | [illegible] |
| கொழுப்பு | [illegible] |
| கார்போ | [illegible] |
| ஹைட்ரேட் | [illegible] |
| கால்ஷியம் | [illegible] |
| பாஸ்பரஸ் | [illegible] |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | [illegible] |
| [illegible] | [illegible] |
| பொட்டாஷியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் ஸி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



# காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு

ஒரு விளையாட்டு போல அந்த விபரீதம் நிகழ்ந்துவிட்டது. இன்னதென்று இனம் பிரித்துப் பார்ப்பதற்குள் மனிதத்தன்மையை அமுக்கிவிட்டு மிருக உணர்ச்சி மேலோங்கிப் போனதால் ஓர் இனக் கலவரமும் அங்கே லேசாக எட்டிப் பார்த்தது.

பைசா பெறாத சமாசாரம். ஒருவருக்கொருவர் நேசத்தோடு விட்டுக் கொடுத்திருந்தால் ஒரு நொடியில் முடிந்து போயிருக்கும் விஷயம். இப்போது விஷ விருட்சமாகி விட்டிருந்தது.

இது இந்த அளவுக்கு வளர்வதற்குக் காரணமே முத்தியாலுதான். அவன் மூக்குக்கு மேல் காத்திருக்கும் அந்த முன்கோபம் தான். வாய் வார்த்தை வாயிலேயே இருக்க முதலில் கைநீட்டியவன் முத்தியாலுதான். பிறகு அப்படி இப்படி என்று ஆளாளுக்குக் கோஷ்டி சேர அமைதியாய் இருந்த ஊர் அரைநொடியில் சந்தைக் கடையானது.

முத்தியாலு சளைக்கவில்லை. வெறி பிடித்தவன் போல செயல்பட்டவன். ஏதோ பல நாள் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டவன் போல இருட்டிய பின்பும் கையில் ஆயுதத்தோடு. கூட நான்கைந்து பேரை சேர்த்துக் கொண்டு எதிர்ப்படுபவர்களில் அவனுக்கு எதிரியாகக் கண்ணில் படுபவர் ஒவ்வொருவரையும் விளாசித் தள்ளினான்.

போலீசுக்குத் தகவல் போய் நான்கைந்து ஜீப் ஊருக்குள் வரவும் விசில் சத்தத்தைக் கேட்ட மாத்திரத்தில், கூட இருந்தவர்கள் எல்லோரும் மூலைக்கொருவராய்ச் சிதறிவிட முத்தியாலு தனித்துவிடப்பட்டான்.

கனத்த பூட்ஸ் காலடிகள் ஒரே சீராக ஒலியெழுப்ப, ஓரிரு டார்ச் ஒளிவட்டங்கள் தன்னை நெருங்கி வரும் அபாயம் தெரிய, அயர்ந்து போய்க் கோணித்திரை தொங்கும் அந்தக் குடிசைக்குள் நுழைந்து மண் சுவரோரம் பதுங்கி உட்கார்ந்து கொண்டான் முத்தியாலு.

முத்தியாலு கண்களை இடுக்கிக் கொண்டு இருட்டைத் துழாவினான். ஓரத்தில் ஒரு மண் பானையும், அதன்மேல் ஈய டம்ளரும் இருப்பது மங்கலாகத் தெரியவே, ஏதோ சொர்க்கத்தைப் பார்த்தது போல மனத்தில் பரவசம் ஊறியது. சட்டென்று எழுந்து கொள்ளும் அவசரத்தில் அவன் தலை சுவரில் மாட்டப்பட்டிருந்த எதன் மீதோ மோத, கனமான ஏதோ ஒன்று அவன் முதுகுக்குப் பின்னால் விழுந்து ஓசை எழுப்ப, "யார்லே அது?" என்ற கரகரப்பான குரல் அவனுக்கு வெகு சமீபமாக் ஜனித்தது.

விக்கித்துப் போனவனாக முத்தியாலு சிலையாகிப் போனான். திரிவிளக்கு திடும்மென்று உயிர்பெற, உற்பத்தியான வெளிச்சத்தில் தான் இருக்கும் இடத்தைக் கண்டு அடிவயிற்றில் பூகம்பத்தை உணர்ந்தான் முத்தியாலு.

பானைக்குப் பக்கத்தில் குறுகிப் படுத்திருந்த உருவம், இவனை அடையாளம் கண்டு கொள்ளச் சிரமப்பட்டுக் கொண்டிருக்கும் அந்தக் குறுகிய கால இடைவெளியில் பாய்ந்து சென்று வாயால் ஊதித் திரிவிளக்கைப் பிணமாக்கினான் முத்தியாலு. அதே சமயம் பூட்ஸ் காலடிகள் அந்தக் குடிசையைச் சமீபித்துச் சற்று இளைப்பாறின.

"எங்கய்யா ஆளைக் காணோம்?"

"இவத்ததான் சாமி ஓடியாந்தான். தலைக்குப் பச்சைத் துண்டை கட்டிக்கிட்டு இருப்பான் பரதேசி நாயி..."

"ஸ்... சும்மா இருங்கய்யா... ஃபைவ் நாட் ஃபோர். இந்தக் குடிசைக்குள்ளே பாருய்யா."

"இதுக்குள்ளே இருக்க மாட்டானுங்க சாமி — இது நம்மவங்க குடிசைங்க."

"யாருதுய்யா!"

"இஸ்கோலுக்கு எதுத்தாப்புல இருக்கிற மரத்தடியில குந்திக்கிட்டு செருப்பு தைப்பானுங்களே கெழவன், பெரியான், அவனோடதுங்க."

"சரி... சரி இன்னும் மேலே போய்ப் பார்ப்போம்."

காலடிகள் உயிர் பெற்றுக் கொஞ்ச நேரத்தில் தேய்ந்து போயின. கிட்டத்தட்ட மூச்சு

# மௌன ஆயுதங்கள்

விஜரா

விடுவதையே மறந்து போய் மரக்கட்டையெனச் சமைந்திருந்த முத்தியாலு மெல்ல அசைந்து கொடுத்தான். இப்போது அவன் கண்கள் இருட்டை ஸ்நேகம் செய்து கொண்டிருந்ததால் கிழவன் எழுந்து உட்கார்ந்து கொண்டிருப்பது புலப்பட்டது.

போயும் போயும் இந்த இடத்தில் ஒளிய நேர்ந்த துரதிர்ஷ்டத்துக்காக மனம் வெதும்பிப் போனான் முத்தியாலு. இந்தக் கிழவனை பலமுறைபார்த்திருப்பதாகமூளை அவனிடம் முன்மொழிந்தது.

ஊரின் இடது கோடியில் இருக்கும் குப்பத்தில் குடி இருக்காமல், வலதுகோடியில் ஒதுக்குப்புறமாக இந்தக் கிழவன் குடி இருப்பதற்குக் காரணமிருந்தது.

கிழவனின் முகம் கூடப் பார்க்கச் சகிக்காது. வெண் குஷ்டமோ என்ன எழவோ உடம்பு முழுவதும் திட்டுத்திட்டாக நிறம் மாறிப்போய், ஒரு நீங்காத அவலட்சணத்தை அவனுக்குக் கொடுத்திருந்தது.

முத்தியாலு போய் விடலாமா என்று யோசித்தான். வெளியே போனால் மென்னியைப் பிடிக்கக் காத்திருக்கும் அபாயத்தை நினைக்கும்போது உடம்பு நடுங்கியது.

அடிக்குப் பயந்த எவனோ ஒருவன் போலீசுக்குப் போக கடைசியில் எல்லாம் குட்டிச்சுவராகிவிட்டது. முத்தியாலு பல்லைக் கடித்துக் கொண்டான். காலையில் அந்தக் குப்பத்து வாசி என்ன ஒரு தெனாவெட்டாகப் பேசினான்.

“சர்க்கார்லேயே எங்களுக்கு மொத இடம் குடுக்கறான். இங்கே என்னய்யா சட்டம் பேசறீங்க?”

முத்தியாலுவுக்குக் கொதிப்பேறியது.

வேற்றுமையை விட்டுக் கொடுத்து எல்லோரும் ஒன்றுதான் என்ற நிலையில் பழகிக் கொண்டிருந்த ஊரில் அந்தக் கணத்திலேயே இனப்பற்று சிலிர்த்துக் கொண்டது. கடுமையான தண்ணீர்ப் பஞ்சத்தில், ஊரின் பொதுக் குழாயில் எல்லோருமே வரிசையாகத் தண்ணீர் பிடித்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டிருந்தனர். ஒருகுப்பத்துப்பெண்ணுக்கு என்ன அவசரமோ, அவள் வரிசை தப்பித் தண்ணீர் பிடிக்க எத்தனிக்க, மற்றவர்கள் கடுமையாக விசாரிக்க, ஆளுக்கொரு பதில் பேச, இதைப் போன்ற கூட்டங்களை விலக்கி பஞ்சாயத்துப் பேசுவதிலேயே ஊரில் பெரிய மனுஷத் தோரணையை வரவழைத்துக் கொண்டிருந்த முத்தியாலு அங்கு வந்துசேர, வழக்கமாகக் கூழைக் கும்பிடு போடும் குப்பம் முத்தியாலுவை அலட்சியம் செய்துவிட.... காலையில் வெடித்த கலவரம் இதுவரை நீண்டு...



"வெளக்குப் பொருத்தட்டுமா தம்பி''

கிழவனின் குரலால் சிலிர்த்துக் கொண்டான் முத்தியாலு. ஆனாலும் பதில் பேசவில்லை. அவனுடைய மௌனத்தையே சம்மதமாக்கிக் கொண்டு திரிவிளக்குக்கு உயிர் கொடுத்தான் கிழவன்.

அந்த மங்கிய வெளிச்சத்தில் கிழவனின் முகம் படுகோரமாய்த் தெரிந்தது.

''காலேயில நடந்த தகராருக்குத்தான் ஒங்களைத் தேடறாங்களோ தம்பி?''

சட்டென்று நிமிர்ந்து கிழவனைப் பார்த்தான் முத்தியாலு. கிழவன் தனக்கு எல்லாம் தெரியும் என்ற பாவனையில் தலையசைத்தான். இங்கே இருந்தால் கிழவன் தன்னைக் காட்டிக் கொடுப்பதற்கும் வாய்ப்பிருக்கிறது என்று முடிவு செய்து கொண்ட முத்தியாலு மெல்ல எழுந்தான்.

''அவசரப்பட்டுப் போவாதீங்க தம்பி — வெளியே அலையுறானுவ போலிருக்கு. பயப்படாமே குந்துங்க. எனக்கு இந்த சாதி சமாசாரம் எல்லாம் கெடையாது. எல்லாரும் மனுஷ சாதி! அம்புட்டுத்தான்.''

கிழவன் மெல்ல உள்ளே நகர்ந்து தகரடின்களை உருட்டி ஒரு காய்ந்த ரொட்டியும், நைந்த வாழைப்பழமும் கொண்டு வந்து முத்தியாலுவிடம் நீட்டினான். முத்தியாலு கிழவனின் கைகளைப் பார்த்தபடி தயங்கவே,

''இதொண்ணும் தொத்து வியாதி கிடையாது தம்பி. வாங்கிக்குங்க!'' என்ற கிழவன் கூடவே, ''இம்புட்டு நேரமா அடிச்சுக்கிட்டீங்க பாருங்க, அதுதான் தொத்து வியாதி'' என்று சர்வசாதாரணமாக ஒரு தத்துவத்தையும் உதிர்த்தான்.

முத்தியாலு அருவருப்புடனே அவற்றை வாங்கிக் கொண்டான். கிழவன் ஈய டம்ளரில் தண்ணீர் எடுத்து வைத்து விட்டு, அடுப்படிக்குப் போய்க் காகிதங்களைக் கிழித்து எரித்து, அடுப்பின் மேலிருந்த அலுமினியப் பாத்திரத்தைச் சூடாக்கி, டம்ளரில் வடித்தான்.

முத்தியாலுவின் அருகில் டம்ளரை வைத்த போது, டீ வாடையும், அதை அமுக்கும் அளவுக்குப் புகைநாற்றமும் சேர்ந்து அடித்தன. என்ன செய்வது? பசிக்குத்தான் எந்த பாரபட்சமும் கிடையாதே!

முத்தியாலு திருப்தியாக ஏப்பம் விட்ட போது ஒரு வெட்க உணர்வு லேசாக எட்டிப் பார்த்து மனத்தில் குறுகுறுத்தது.

''பாத்தீங்களா தம்பி — இன்னொரு சமயமா இருந்திருந்தா நீங்க இந்த குடிசைக்குள்ளார வந்திருக்க முடியுமா? இல்லே இந்த ஊட்டுத் தீனியைத் தின்னிருக்க முடியுமா? கட்டாயம்னு வரும்போது கட்டுப்பாடுங்க எல்லாம் காணாம போயிடுது பாத்தீங்களா? எனம், சாதி, எல்லாம் மனுஷங்க வெச்சிக்கிட்டது! ஆனா பசியும், உசுரும் பகவான் வச்சது! இல்லீங்களா?''

இதை எல்லாம் கிழவன் ஏன் சொல்கிறான் என்று முத்தியாலுவுக்குப் புரியவில்லை. சமய சந்தர்ப்பம் தெரியாமல் 'லெக்சர்' அடிக்கும் கிழவனின் செயல் எரிச்சல் மூட்டியது.

''சுதந்திரப் போராட்டம் ஞாபகமிருக்கா தம்பி உங்களுக்கு? அப்ப எல்லாம் நீங்க குழந்தையா இருந்திருப்பீங்க? இனம், சாதின்னு பார்க்காம எல்லாரும் அந்தப் போராட்டத்துல குதிச்சாங்க! தியாகம் பண்ணுனாங்க! அந்தச் சந்தர்ப்பத்துல ஏதாவது ஒரு நிமிஷத்துல அவங்க ஒவ்வொருத்தரும் தன்னோட எனம், சாதின்னு திரும்பி இருந்தா என்ன நடந்திருக்கும்? இன்னிக்கு சுதந்திரத்தோட அருமையை நீங்க எல்லாம் இப்படி நாசப்படுத்தவே முடியாம போயிருக்கும்! எல்லாரும் மனுஷங்க! அவங்களுக்குத் தேவை சுதந்திரம்ங்கிற ஒரே உணர்ச்சி தான் தலை எழுத்தையே மாத்தின சரித்திரத்தையே எழுதிச்சு! அப்படி பாடுபட்டு வாங்கின சுதந்திரத்தோட அர்த்தமெல்லாம் இப்படி ஒருத்தரை ஒருத்தர் வேட்டையாடற வேதனையான நிகழ்ச்சிகளிலே அனர்த்தமாயிடுது இல்லே.''

முத்தியாலு இதயம் படபடக்க இறுகிப் போனான். கிழவன் எதையாவது உளறும் ஒரு புறம்போக்கு அல்ல! உண்மைகளைத் தொட்டு உரசும் தீர்க்கதரிசி என்பதாக ஒரு எண்ணம் அவன் மனத்தில் பளிச்சிட்டுச் சிதறியது.

கொஞ்ச நேரத்தில் மீண்டும் காலடி




# பிலிப்ஸ்

## பிலிப்ஸ் டிசைன் செய்துள்ளதென்றால் அதை ஒவ்வொரு அம்சத்திலும் காணலாம்.



**சீரான அமைப்பு, எழில்மிகு தோற்றம்**
சேர்த்தியும் கம்பீரமும் இணைந்த உறுதிமிக்க பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர், கச்சிதமானதும் உபயோகத்திற்கு எளிதானதும் ஆகும்.



**உபயோகத்திற்கு மிக எளிதானது**
இரண்டு ஜார்கள்—திரவ பதார்த்தங்களுக்கென ஒரு உறுதிமிக்க எவ்ரான் பிளாஸ்டிக் ஜார்; அரைப்பதற்கென ஒரு ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் ஜார். ஒவ்வொன்றும் தனித்தனியாக இணைக்கப்பட்ட பிளேடுகளுடன்

**பல உபயோகங்கள்**
அரைத்தல், கலத்தல், நறுக்குதல், பிழிதல், ப்ளெண்டிங் மற்றும் விப்பிங் போன்ற வேலைகள் செய்ய 3-4 நிமிடங்களே தேவை. இதில் சக்திவாய்ந்த 450 வாட் மோட்டார் உள்ளது. மூன்று அடிப்படை சுழல் வேகங்களுக்கென ரோட்டரி ஸ்விட்ச் மற்றும் உங்களுக்குத் தேவைப்படும் சரியான சுழல் வேகத்தைப் பெற 'இஞ்சிங்' செளகரியம் கொண்டது.

அம்சத்துக்கு அம்சம் இது உயர்தரமானதாகும். தவிர, நாடெங்கும் பரவலாக விற்பனைக்குப் பின் பிலிப்ஸ் வழங்கும் சர்வீஸ் வசதியின் பின்பலம் கொண்டது.

## பிலிப்ஸ் மிக்ஸர்-கிரைண்டர்

CLARION/B/P/168/203 TAM

**பிலிப்ஸ்–ஐம்பது ஆண்டுகளுக்கும் மேலாக இந்திய வீடுதோறும் விளங்கும் நம்பகமான பெயர்**

ஓசைகள் செவியை அறையவே கிழவன் பரபரப்படைந்தான். திரிவிளக்கை அணைத்து விட்டு ''தம்பி — இங்கிட்டு வாங்க'' என்ற படி முத்தியாலுவை மண் சுவர் தடுத்த அடுத்த பகுதிக்கு இழுத்தான். அதற்குள் வெளியே கோணித்திரை விலக்கப்பட்டு டார்ச் வெளிச்சம் குடிசைக்குள் தாவியது. ''ஏய் கெழவா — இங்கிட்டு முத்தியாலு வந்தானா?'' கையில் கம்பும், அரிவாளுமா யிருந்தசிலபேர் அதட்டிக்கேட்கவும், கிழவன் முகத்தில் எந்த பாவமும் சிதற விடாமல், ''இல்லியே'' என்றான். கூட்டம் அவர்களுக் குள் ஏதோ சலசலத்துக் கொண்டது. சுவருக் குப் பின்னால் நின்றிருந்த முத்தியாலு தேகம் பதறினான். திடீரென்று கூட்டத்திலிருந்த ஒருவன் இரவின் அமைதியைக் கிழிக்கும் படி கத்தினான்.

''கெழவன் நம்ம சாதிக்காரனா இருந்துக் கிட்டே நமக்கு உதவி செய்யாம அடுத்த சாதிக்காரனுக்கு அடைக்கலம் குடுக்க றான்டா! அதோ பாருங்கடா முத்தியாலு வோட பச்சைக் கலர் துண்டு — பய இங்க தான்டா இருக்கான்.''

யாரோ ஒருவன் பாய்ந்து கிழவனின் மென்னியைப் பிடித்தான். ''மருவாதியா சொல்லு கிழவா — எங்கே அவன்?'' கிழவன் கமறும் குரலில், ''தெரியல'' என்று சொல் லும்போதே அவன்மேல் நாலைந்து அடிகள் விழுந்தன. பதுங்கி இருந்த முத்தியாலு வுக்குத் தேகம் பதறியது. கிழவன் மீது விழும் அடிகள் ஒவ்வொன்றும் அவன் இதயச் சுவர் களில் எறியும் கற்களாகி குருதி வடியும் கொடிய வேதனைக்குள்ளாக்கின. உயர்வும், தாழ்வும் பிறப்பால் அல்ல, செய்கின்ற தியாகத்தாலும், பாய்கின்ற கருணையாலும் தான் என்பது புரிய ஆரம்பித்தது.

அந்த ஒரே ஒரு விநாடியில் இந்த உலக வாழ்க்கையின் கரைகளைத் தொட்டுவிட்ட அனுபவ ஞானம் பீறிட்டுக் கிளம்ப, தன்னை, தன் நிலையை, தான் செய்த பிழையை, எல்லாவற்றையும் மறந்தவனாக, ''விடுங்கடா அவரை'' என்றபடி வெளிப்பட்டான் முத்தி யாலு.

கூட்டம் அவன்மேல் பாய்ந்து தடிகளை யும், கைகளையும் பிரயோகித்தது. இந்த ஸ்தூல ஆயுதங்கள் உண்டாக்கும் வலியை உணர முடியாமல், தன் கேவலமான செய் கையைச் சுட்டிக்காட்டி மௌனமாகவே வதைக்கும் மன ஆயுதத்தின் வலியில் உறைந்து போயிருந்தான் முத்தியாலு.

இவற்றை எல்லாம் தாங்கிக் கொண்டு ரத்தம் சிந்திய நேரத்திலும், தன் இனத்துக் காக இல்லாமல் அடிப்பவர்களின் இனத்துக் காகவே இந்தக் குருதி கொப்பளிக்கிறது என்ற பெருமித உணர்வு தோன்றியது அவ னுக்கு. நினைவு தப்பிக் கீழே சரியும்போது உண்மையான சுதந்திரம் இன்று, இந்தக் கணத்தில்தான் ஒப்புக்கொள்ளப்பட்டதைப் போல அவன் மனத்தில் இனம் தெரியாத நிம்மதி பொங்கிப் பிரவகித்துக் கொண் டிருந்தது.




அடுத்த முறை,
ஸன்ஃப்ளவர்
பாதுகாப்பு கவசம் மூலம் உங்கள்
குடும்பத்தைக் காத்திடுங்கள்.



**ஸன்ஃப்ளவர் இகானமி பேக். நீங்கள் இழப்பதோ சில சில்லறை காசுகளும் சில்லறை வனஸ்பதியும். பெறுவதோ அதி தூய்மை.**

WPL/25.35

உங்கள் குடும்பத்திற்கு, முற்றிலும் பாதுகாப்பானதையும், தூய்மையானதையும் கொடுங்கள்: ஸன்ஃப்ளவர் ப்ராண்ட் வனஸ்பதி. விட்டமின் A மற்றும் D செறிந்த, ஊட்டமிக்க, ஆரோக்கியமான வனஸ்பதி உங்களுக்குக் கிடைக்க, ஸன்ஃப்ளவர் பாதுகாப்பு கவசத்தால் ஸீல் செய்யப்பட்டு, பேக் செய்யப்பட்டு வருகிறது.



IS:10633
ISI
VANASPATI



# ஸன்ஃப்ளவர்

ப்ராண்ட் வனஸ்பதி
இதை விடச் சிறந்தது தூய நெய் மட்டுமே.

கிலோ மற்றும் ½ கிலோ
பேக்குகளில் கிடைக்கிறது.

WIPRO LTD - Closer to the consumer

# மாண்புமிகு முதலமைச்சர்

கோவி. மணிசேகரன்

## சருக்கம் 7

## சேக்கிழார்

இலக்கிய இலக்கணத்தில் இணையிலா அரிமா இராமதேவர் என்பது சோழநாட்டில் பிரசித்தம்:

வரலாற்று ஆராய்ச்சிப் போக்கும், மக்கள் வாழும் முறைகளைப் பற்றிப் பல நகரங்களில் ஆற்றிய சொற்பொழிவும் தமிழகத்துச் செவிகளில் கற்கண்டு சிலை செய்து தேன் முழுக்காட்டிய செய்தி அரண்மனைக்கு வெளிச்சமிட்ட விலாசங்கள்.

இப்பேர்ப்பட்டவர் உள்ளக் கதவங்களை உரிமையுடன் திறந்து தமது சமகாலத்துப் புலவரைப் பாராட்டிய மனப்பாங்கு...

அது, ஒட்டக்கூத்தரைவிடச் சோழ சாம்ராஜ்யக் கூத்தனை குலோத்துங்க சோழனைப் பெரிதாகக் கவர்ந்து, மதிப்பை மலையாக்கி, மரியாதை அதன் உச்சியில் விளக்கேற்றி மகிழ்ந்தது.

ஒட்டக்கூத்தரோ, ஓங்குபுகழ் தமிழ்நாவில் ஓசையெழுப்புகிறார்.

''குன்றத்தூர் அளித்த குங்குமத் தமிழே! என்ன கேட்டீர்கள்? 'புலவர் என்ற சொல்லில் யாணும் அடங்குவேனு?... ஓ... உங்களையன்றி மாப்புலவர் வேறு எவருளார்? அடங்குவேனு என்று நீங்கள் கேட்டது அவையடக்கம்! 'நாங்கள் உங்களுள் அடங்குவமோ?' என்பதே இச்சொல்லின் அடக்கம்!

இராமதேவரின் பொன்மனம் பூரித்துப் போனது.

''கூத்தரே! நீங்கள் இப்படிக் கூறலாமா? அடியார்க்கு அடியேன் என்று கூறிய ஆரூரர் பால்அன்புகொண்டவன் அடியேன்! தமிழில் பாடும் தமிழறிஞர் பலருக்கும் நேசன் நான் என்று சொல்வதும் கூட அகம்பாவம்; தாசன் நான்!''

''இராமதேவரே! இந்தப் பிள்ளைத் தமிழ் குறித்து ஒரு வரி... நீங்கள் போற்றும் ஆரூரரான சுந்தரத் தமிழிலிருந்து ஒரு வரி...

''ஒரு வரி? ஒரு வரி? இது குலோத்துங்கரைத் தாலாட்டும் கோபுரத் தமிழ்!''

''இந்தத் தமிழ் மூலம் உங்களை ஒன்று இரப்பேன்; மறுப்பின் என் தமிழ் இறவாத் தமிழல்ல! கோபுரத் தமிழுமல்ல! ஒட்டக்கூத்தரே!''

பதறிப் போனார் சைவப் புரட்சி மனம் கொண்ட சங்கத் தமிழ் கண்ட இராமதேவர்.

அவையில் பல க்ஷணங்கள் அமைதியின் அபிஷேகம்.

''ஒட்டக்கூத்தரே! நீங்கள் என்னிடம் இரப்பதா?''

''இராமதேவரே! என் மாணவன் குலோத்துங்கன். இந்த அனபாயன் எங்களை எல்லாம் விட்டு உங்களிடம் அபயம் கோரும் அபயன்! உங்களைக் காதலிக்கிறான்; கசிந்து கண்ணீர் மல்குகிறான், தமிழ் ஞான சம்பந்தன் ஈசனை எண்ணிக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கியதைப் போல! வயதில் பெரியவன் என்பதால் உங்களை வாழ்த்திக் கேட்டுக் கொள்ளுகிறேன்! முதலமைச்சர் பதவியாம் அந்த மாண்புமிகு பதவியை ஏற்க! உங்களைத் தவிர அந்தப் பதவிக்கு இன்னும் ஒருவர் பிறக்கவில்லை என்று நானே முடிவு செய்து விட்ட பிறகு? மக்களைப் புரிந்த மாண்புள்ளம் உங்கள் களங்கமற்ற – தேயாத சந்திர உள்ளமான இராம உள்ளம்! கலையுள்ளம்!''

''கூத்தரே! தயவு செய்து என்னைத் தமிழால் வளைக்காதீர்கள். நான் அந்த ஈசனுக்கு இணையாக மதித்து வணங்குவதே ஞாலம் அளந்த மேன்மை தெய்வத் தமிழ்! நான் காட்டுக்குள் இருக்க ஆசைப்படுபவன்: என்னைக் கூட்டுக்குள் தள்ள முயலாதீர்கள்!''

கண்களில் நீர்த்திவலைகள் அரும்ப இமைகளை மூடி அண்ணாந்து ஈச நாமத்தை வழுத்திக் கொள்கிறார் இராமதேவர்.

இச்சமயம் குலோத்துங்க சோழ மாமன்னன், ஏதோ கூற, ஓரடி முன்னே எடுத்து வைத்து நகர, அவரை அன்புடன் சமிக்ஞையால் தடுத்த பட்டத்தரசி தியாகவல்லி, இராமதேவரை நெருங்குகிறாள்.

''அருள் மொழியாம் தமிழ் மொழியின் அடியவர்கள் வரலாற்றையறிந்த சுகமான தமிழே! சுந்தரத் தமிழே! தேன்மதுரத் தமிழே! அந்த அடியார்கள் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன்! நல்லதையே செய்பவரான நாகேச்சுரர் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன்! இந்த அரண்மனையில் உங்களுக்கு எந்தவித இடையூறும் ஏற்படாதிருக்க நான் சாட்சிபூதமாக நிற்கிறேன். தொண்டை மண்டலம் தந்த தொன்மைத் தமிழே! எனது கணவர் – சோழப் பேரரசர், ஒரு பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார்! நீங்கள் முதலமைச்சர் பதவி ஏற்ருல் தில்லைவாழ் நடராஜ மூர்த்தியின் பேரம்பலத்துக்குப் பொன் வேய்வதாகப் பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார்! அந்த நல்ல



''சண்டைக் காட்சிகளே இல்லாத உங்க படத்தில் எப்படி நிறைய குத்து வெட்டுக்கள் இருக்குன்னு சொல்றீங்க?''

''நான் சென்சாரைச் சொன்னேங்க.''

— கீழை. அ. கதிர்வேல்.

செயல் நடைபெற வேண்டாம் எனில், நீங்கள் கூத்தர் தமிழுக்கும் இரங்க வேண்டாம்; இந்தத் தியாகவல்லியின் வாக்குறுதியையும் மதிக்க வேண்டாம். அன்போடு விடைதருகிறோம். குன்றத்தூருக்குச் சென்று வாருங்கள்!''

இசைக் கருவிகளிலேயே சிறந்தது ஒரு பத்தினிப் பெண்ணின் இனிய நாவு என்பது போலப் பட்டத்தரசியின் குரல் ஒலிக்கக் கேட்ட இராமதேவர், ''தாயே!'' என்று கண் மலர்ந்து கவனிக்கிறார்.

''இந்த முதலமைச்சர் பதவிக்காகப் பேரம்பலம் பொன்வேயப்படுகிறதா?''

மெய்சிலிர்த்துக் கவனிக்கிறார், இராமதேவர்.

கூத்தரோ தமிழால் யாசிக்கிறார்; தியாகவல்லி தேவியாரோ, கவசமாய் நின்று வாக்குறுதியளிக்கிறார்; சோழ மாமன்னரோ பேரம்பலத்துக்குப் பொன்வேயப்போகிறார். இவற்றைப் புறக்கணிப்பது நாகரிகமாகுமா?

எண்ணிப் பார்க்கிறார் ஏற்றமிகு தமிழின் ஏந்தலான இராமதேவர்.

தொலைவிலிருந்த இரு அமைச்சர்களான சம்புவராயரும், காடவராயரும் 'பதவி வேண்டாம்; குன்றத்தூருக்கே போய்த் தொலையேன்!' என்று மனத்துள் முனகி எரிச்சலுற்றுக் கவனிக்கிறார்கள்.

இராமதேவர் ஈசனின் அலகிலா விளையாட்டை எண்ணி மருண்டு நோக்குகிறார்...

'ஜல்...'

எங்கோ சலங்கையோசை...

நெற்றிக்கு நேரே புருவத்துக்கிடையே ஜோதி, தாண்டவமாடுவது போன்ற பிரமை...!

அவன் கூறிய சோழப் பேரம்பலச் சொற்கள், செவிகளில் சலங்கையாய் ஒலிக்கின்றன.

தியாகவல்லி தேவியாரைக் கவனிக்கிறார் இராமதேவர்.

''என்ன சொன்னீர்கள் தாயே! குன்றத்தூருக்குச் சென்று வாருங்கள்...! வாருங்கள் என்றுதானே சொன்னீர்கள்?''

கண்களில் நீர்மல்க 'ஆம்' என்பது போல் தியாகவல்லி அலங்காரத்தலையை அசைக்க...

கூந்தலாபரணங்களும் குண்டலங்களும் குரல் கொடுத்துக் கெஞ்சுகின்றன.

''வருகிறேன் தாயே! நிச்சயம் வருகிறேன்! சோழ நாட்டு முதலமைச்சனாக வருகிறேன்! போதுமா சோழமாதேவி? போதுமா கூத்தர் பெருமானே? போதுமா சோழ மாமன்னா?''

சுகமருவிய சுந்தரச் சொற்கள் சொரிந்தது தான் தாமதம்...

அடுத்து...

''சோழநாட்டு மாண்புமிகு முதலமைச்சர்!'' என்று பெரிதாகக் குரல் கொடுத்தான் யாதவராயன்.

மண்டபமே ''வாழ்க வாழ்க!'' என்று பெருங்குரல் எழுப்ப...

அந்தக் குரல்களுள் சோழமாமன்னனுடைய குரலும் சேர்ந்து ஒலித்ததுதான் பெருமையிலும் பெருமை! அதைத் தொடர்ந்து ஒட்டக்கூத்தரும் தியாகவல்லி தேவியும் கரம் கூப்பிப் பணிந்து நின்ற காட்சி... அருமையிலும் அருமை!

இப்போதுதான் மாமன்னன் குலோத்துங்க சோழன் நாமலர்ந்தான்:

''இராமதேவரே! செல்கிறபோதே முதலமைச்சராகச் சென்று, குன்றத்தூரிலிருந்து முதலமைச்சராகவே திரும்புங்கள்! அந்த மாண்பினை இந்த நல்ல நாளிலேயே பிரகடனப்படுத்தலாமே! பிள்ளைத் தமிழேற்ற இச் சோழப்பிள்ளையை மாண்போடு வாழ்த்தியருளுங்கள்!''

''திருநாகேச்சுரா! இது உன் திருவுள்ள மாறுதல்; ஏற்கிறேன்; சோழமாமன்னரை வாழ்த்துகிறேன். வாழி அனபாயன் வையம் இனிக்க!''

இராமதேவர் ஏற்றதும், பதவிப் பிரமாணத்துக்கான ஏற்பாடுகள் சுறுசுறுவென்று நிகழ்கின்றன.

அரண்மனைக் கணிதவல்லான் கணக்கிட்டுப் பார்க்கிறான்.

அன்று வியாழக்கிழமை; நடுப்பகல் மூன்று நாழிகைகள் முடிவு பெற்று நகர்ந்த நேரம்...

நல்ல குரு ஓரை...

அரசக் குரவரான ஒட்டக்கூத்தர் முன் நிற்க, வருகை தந்திருந்த தில்லைவாழ் அந்தணர்கள் சிலர் வேதம் முழங்க, திருவோலக்கமே தித்திக்க வாழ்த்த, பல்லியம் முழங்க, இராமதேவரை அழைத்து வருகிறார்கள்.

அமைச்சுப் பதவியிலிருந்தவர்களுக்கு அஸ்தியில் காய்ச்சல்; அவசியமே இல்லை. அந்தப் பொறுத்தருளும் பொன்மனச் செம்மலை — முத்தமிழ்க் கலைஞரை அவர்கள் புரிந்து கொண்டது அவ்வளவுதான்! போகட்டும்; பொறுமலில் சாகட்டும்; இல்லை, பொசுங்கி வேகட்டும். புயலை விதைப்பவர் தென்றலையா அறுவடை செய்ய முடியும்?

அத்தாணி மண்டபமே அமர்க்களப்படுமளவுக்கு அமோகவரவேற்புடன் முதலமைச்சர் பதவி ஏற்கிறார் மாண்புமிகு இராமதேவர்.

வாழ்த்தொலியோ வாழ்த்தொலி, வாலை

யதிரடிக்கும் வாழ்த்தொலிகள்...

மாண்புமிகு முதலமைச்சர் இராமதேவர், அனைவரையும் வணங்கி நாமணக்க, நன்றி பகர்ந்து அமருகிறார்.

மாமன்னன் குலோத்துங்க சோழன், அரியணை விட்டெழுந்து அவையை வணங்குகிறான்; வாய் மலருகிறான்:

"மேன்மைத் தமிழின் மாண்பினை ஏற்கெனவே பெற்றுவிட்டவர், மாண்புமிகு முதலமைச்சர் இராமதேவர். அவரை இப்பதவியினை ஏற்கச் செய்த ஜோதி வடிவாய் நிற்கும் தில்லையம்பலவனை வாழ்த்தி வணங்குகிறேன்! இந்தப் பொன்னனைய நன்னாளில் நமது முதலமைச்சருக்கு 'உத்தம சோழப் பல்லவர்' என்ற விருதினை வழங்குகிறேன். இது மட்டுமல்லாது, இனி இவரது நாமம் இராமதேவரானாலும், சேக்கிழார் குடிக்கே பெருமை சேர்த்துவிட்டதால், இவரது நாமம் சேக்கிழார் என்றே நாடு முழுதும் மணக்குமாக! இன்றே தில்லைப் பேரம்பலத்துக்குப் பொன்வேயும் திருப்பணி ஆரம்பமாகலாம்! சேக்கிழார் என்ற திருப்பெயர் இம்மண்டபமே அதிரும்படி ஒலிக்குமாக!"

சோழமாமன்னன் கரம் கூப்பி வணங்குகிறான்.

"உத்தம சோழப் பல்லவராயர் மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார்..."

"வாழ்க! வாழ்க!"

"மாமன்னர் அனபாய குலோத்துங்க சோழர்..."

"வாழ்க! வாழ்க!"

"அவைக்குரவர் வாணிதாசர் ஒட்டக்கூத்தர்..."

"வாழ்க! வாழ்க!"

அத்தாணி மண்டபம், முத்தான நிகழ்ச்சி கண்டு அமைதியாக நிறைகிறது.

குன்றத்தூரை அடைந்த மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழாருக்கு, மகத்தான வரவேற்பு கொடுத்து மக்கள் மகிழ்ச்சியைத் தெரிவிக்கிறார்கள்.

ஈன்றெடுத்த அன்னையின் பாதம் பணிந்து மகிழ்கிறார் சேக்கிழார். இரு தினங்கள் ஓய்வு கண்டு, கங்கைகொண்டசோழபுரம்நோக்கிப் புறப்படுகிறார்.

அரசப் பரிவாரங்களுடன் வரும் மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழாரைத் தொண்டை மண்டலமே திரண்டு, வருகிற போதும் வாழ்த்தியது; செல்கிற போதும் வாழ்த்துக் கூறி மகிழ்கிறது.

வழியில், நேரே தில்லை(சிதம்பரம்)க்குச் செல்கிறார்.

மூவாயிரம் அந்தணர் சூழ, தேவாதி தேவன் வாழ் திருநகராயிற்றே தில்லை.

முதலமைச்சரை முரசு கொட்டி வரவேற்கிறார்கள். ஜம்ப தாளங்கள் முழங்குகின்றன.

கிழக்குக் கோபுர வாசல் வழியே சென்ற சேக்கிழார், பொன்னம்பல வாணனைக் கண்டு பொற்பாத கமலங்களைச் சேவிக்கிறார்; ஆழ்ந்த தியானத்தில் மூழ்குகிறார்.



"என் படத்துல நீங்க கௌரவ வேஷத்திலே நடிக்கணும்."

"என்ன வேஷம்?"

"பேட்டை ரௌடியா."

— வி. ராஜேஸ்வரி.

அப்போது...

'ஜல்...'

'தா...'

'ஜஜ்ஜல்...!'

'தத்தை...'

'திரிகிட, தரிகிட, திரிகிட, தரிகிட தஜனு... தத் தஜனு... தாங்கிட, தீங்கிட தஜனு...

நெற்றிக்கு நேரே நிலாவணிந்த நிர்மலன், கங்கைமணாளன், அரவாபரணன், திரிசூல திரிநயனன், ஆடுகிறான், ஆடுகிறான், ஆடுகிறான்...

வழிபாட்டை முடித்துக் கொண்டு திரும்புகிறார்.

பேரம்பலம் பொன்வேய்கிற திருப்பணிகள் சரிவர நடக்கின்றனவா என்று கவனிக்கிறார். இப்பணியைச் சரியாக மேற்பார்வையிட்டுக் கவனிக்க, அப்போது ஓர் எண்ணம் உதயம்காண, தம்பி பாலறுவாயனை அழைத்து வர உத்தரவிடுகிறார். பின்னர் ஓய்வுகொள்ள, அவருக்கென்று அளித்த வீடு நோக்கிப் புறப்படுகிறார்.

சிறியதானாலும் செம்மையுற அமைந்த அந்த வீட்டிற்குச் சென்று, தனிமையில் ஓய்வு கொள்கிறார்.

வெளியில் பலத்த காவல்.

ஆலயத்து அதிகாரிகள் வருவதும்போவதுமாக இருக்கிறார்கள்.

பகல் உணவை முடித்துக் கொண்டு தலைநகர் கங்கை கொண்ட சோழபுரம் நோக்கிப் பயணப்பட இருந்தார்.

சற்றே உறக்கம் கண்டு களைப்பு நீங்கி எழுவதற்கும், பகலுணவு ஆயத்தமாக வந்து சேருவதற்கும் சரியாக இருந்தது.

முகம் அலம்பி, நெற்றியில் சிவச்சின்னமிட்டு உணவுக்கு வந்து அமருகிற வேளையில்...

ஒரு வீரப் பணியாளன் வந்து நின்று வணங்கிச் செய்தி சொன்னான்:

"அமைச்சர் பெருமானே! வாசலில் ஒரு பெண் வந்து நிற்கிறாள். ஜோதி என்று பெயரைச் சொன்னாள். தங்களைக் காண வேண்டுமாம்!"

ஜோதி வந்திருக்கிறாளா?

"வரச் சொல்!" என்று உத்தரவிட்ட சேக்கிழார், உணவு பரிமாறுபவனை நோக்கி, "இன்னொரு இலை போடு!" என்றார்.

(தொடரும்)





**வாசகர் பங்கு**



### சீனு இல்லே, கமல்!

மூன்றாம் பிறை படம் பார்த்துக் கொண்டிருந்தபோது ஸ்ரீதேவி கமலிடம், ''உன் பெயர் என்ன?'' என்று கேட்கும் காட்சி திரையில் ஓடிக் கொண்டிருந்தது. ஸ்ரீதேவியின் கேள்விக்குக் கமல் ''சீனு'' என்று பதில் கூற, எனக்கு முன் சீட்டில் அமர்ந்திருந்த மூன்று வயதுக் குழந்தை, ''இல்லே! உன் பெயர் கமல்!'' என்று பெரிதாகக் கத்த தியேட்டரே சிரிப்பில் அதிர்ந்தது.

— கே. வரதராஜன்,
சென்னை—5.



# சந்தர்ப்ப சிரிப்பு

### கண்ணீர் ஜோக்!

எனது உறவினர் இல்லத்தில் விருந்து உண்ணச் சென்றிருந்தேன். சாப்பிட்டு முடித்ததும் ''சாப்பாடு எப்படி இருந்தது?'' என்று கேட்டார் அவர். ''நம்ப ஊர் சாப்பாடு என்றால் நாவில் ஜலம் வரும்; இங்கே கண்ணிலே ஜலம் வந்துவிட்டது!'' என்று காரம் தூக்கலாக இருந்த சாப்பாட்டை நான் வர்ணித்ததும் ஒரே சிரிப்புத்தான்.

— பி. எஸ். பாலசுப்பிரமணியம்,
பென்னாகரம்.

''இரண்டு சாவிகளுள் ஒன்றை என்னிடம் கொடுத்து வைக்கக் கூடாதா?''

— ஆர். சந்திரா, சென்னை—5.

### இரண்டில் ஒன்று!

காரியாலயத்திலிருந்து களைப்புடன் திரும்பிய கணவன் வீடு பூட்டியிருப்பதைப் பார்த்துச் சலிப்புடனும் கோபத்துடனும் சொன்னான்: ''அவள் வரட்டும்! இரண்டில் ஒன்று பகட்டு விடுகிறேன்!'' மனைவி வந்ததும் அவன் கேட்டான்:

### ரொம்பப் பிடித்த வகுப்பு

பொங்கலன்று ஆர்வத்துடன் கலர்க் கோலம் போட உதவி செய்து கொண்டிருந்தான் பக்கத்து வீட்டுப் பொடியன். ''உனக்கு ஸ்கூலில் டிராயிங் கிளாஸ்தான் ரொம்பப் பிடிக்குமோ?'' என்று அவனிடம் கேட்டேன். ''இல்லே, எனக்கு டீச்சர் வராத கிளாஸ்தான் ரொம்பப் பிடிக்கும்!'' என்று

அந்த ஐந்து வயதுச் சிறுவன் பதில் சொல்லவும் அங்கிருந்தவர்கள் எல்லோருமே 'கொல்' என்று சிரித்து விட்டோம்.

— சரஸ்வதி ராமகிருஷ்ணன், மதுரை.

## 'மணி'யான ஜோக்!

பேராசிரியர் கார்மேகக் கோனார் மதுரை அமெரிக்கன் கல்லூரியில் பி. ஏ. தமிழ் வகுப்பு நடத்திக் கொண்டிருந்தார். மாணவர்கள் இடதுபுறமும் மாணவிகள் வலது பக்கமுமாக அமர்ந்திருந்தார்கள். மாணவிகள் இருந்த பக்கத்தில்தான் சுவர்க் கடிகாரம் மாட்டியிருந்தது. மாணவர்கள் கடிகாரத்தைப் பார்க்கும் சாக்கில் அடிக்கடி பெண்களைத் திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தனர். இதனைக் கவனித்த பேராசிரியர், ''என்ன கண் மணியை நோக்குகிறதோ?'' என்றார் கிண்டலாக. வகுப்பில் கண்மணி என்ற அழகான பெண் இருந்ததால் மாணவர்களாகிய நாங்கள் இதை மிகவும் ரசித்துச் சிரித்தோம்.

— என். சுந்தரராஜன், அருப்புக்கோட்டை.



## கண்டக்டர் கூட ஜோக் அடித்தார்!

நானும் எனது நண்பனும் பஸ்ஸில் பிரயாணம் செய்தபோது அவன் முன் பக்கமாக ஏற நான் பின்புறத்தில் ஏறினேன். கண்டக்டர் என்னிடம் வந்து, டிக்கெட் வாங்கச் சொல்லிக் கேட்டதும் 'முன்னால் கண்ணாடி அணிந்துள்ளவர் எனக்கும் சேர்த்து டிக்கெட் எடுப்பார்' என்றேன். உடனே கண்டக்டர் ''முன்னால் கண்ணாடி அணியாமல் பின்னாடியா அணிவார்கள்?'' என்று விஷமத்தனமாய்க் கேட்டதும் பஸ்ஸே சிரிப்பில் அதிர்ந்தது.

— பி. பாஸ்கரன், காட்பாடி



## திறந்தால் தானே கொட்டும்!

வீட்டில்யாவரும்சினிமாவுக்குக்கிளம்பிக் கொண்டிருந்தபோது வானம் இருள ஆரம்பித்தது. ''வானம் மூடிக் கொண்டிருக்கிறதே! மழை கொட்டினால் என்ன செய்வது?'' என்று அம்மா கவலைப்பட்டாள். ''வானம் மூடிக் கொண்டிருந்தால் எப்படி மழை கொட்டும்? திறந்தால்தானே கொட்டும்? வா, உடனே சினிமாவுக்குப் போவோம்!'' என்று குழந்தை சரண்யா சொல்லவும் சிரித்துக் கொண்டே கிளம்பினோம்.

— ஆர். காமாக்ஷி புதுக்கோட்டை.

## ஒத்து வரும் முன்னே...!

என் நண்பருக்குச் சரியான வரன் அமையாத நிலையில் என் மனைவியும் நானும் சில இடங்களை அவருக்குச் சிபாரிசு செய்தோம். அந்தத் தருணத்தில் அவர் எங்கள் வீட்டுக்கு வருகை தந்தார். ''உங்களுக்கு வரன் ஒத்து வருகிறதா?'' என்று என் மனைவி அவரிடம் ஆவலாகக் கேட்டபோது, அவர் சொன்னார்: ''ஒன்றும் ஒத்து வரவில்லையே! ஒத்து வந்தால் நாதஸ்வரமும் பின்னாலேயே வரும்!''

அன்று சிரித்ததில் அனைவருக்கும் புரையேறிவிட்டது.

— என். ஸ்ரீதர், சென்னை—40.

## ராம்! ராம்!

ஜகஜீவன்ராம் ரயில்வே மந்திரியாக இருந்த காலம் அது. ரயில் விபத்து நடந்து சிலர் உயிர் இழந்திருந்தனர். பார்லிமெண்டில் இது பற்றிய பேச்சு எழுந்தபோது, எதிர்க்கட்சி எம். பி. மிகச் சமயோசிதமாகச் சொன்னார்: ''நாம் ரயிலில் போகும் போது இந்த 'ஜகத்'தைப் பற்றியும் 'ஜீவனை'ப் பற்றியும் மறந்து விட வேண்டும். சதா வாயால் 'ராம்' 'ராம்' என்று உச்சரித்துக் கொண்டே இருக்க வேண்டும்.''

— ஆர். நரசிம்மன், சென்னை—41.

## குழந்தை மனம்!

யார் வீட்டிற்காவது சென்றால் இதைக் கொடு, அதைக் கொடு என்று கேட்டு நச்சரிக்கக் கூடாது என்று எச்சரித்து வைத்திருந்த போதும் என் மகன் கார்த்திக்கை நண்பர் வீட்டுக்குக் கூட்டிப் போன போது, அவர்களிடம் வாழைப்பழம் கேட்டு வாங்கிக் கொண்டான். என் கணவர், **''What is this Karthik!''** என்று அவனைக் கடிந்துகொண்ட போது, **''This is Banana''** என்றான் சர்வசாதாரணமாக!

— கீதா ஹரிஹரன், சென்னை—11.



''யாராவது என்னைத் தோற்கடிப்ப தாகக் கனவு கண்டால்கூட அவர் விழித் தெழுந்த பிறகு என்னிடம் மன்னிப்பு கேட்கவேண்டும்.''—குத்துச் சண்டையில் உலக சாம்பியனாக விளங்கிய முகமது அலி.

தகவல்: ப. மூர்த்தி.

## வருத்தத்துக்குரிய விஷயங்கள்!

எங்களது வகுப்பில் ஒரு மாணவனைப் பார்த்து, ''நீ எப்போது பிறந்தாய்?'' என்று கேட்டார் ஆசிரியர். ''காந்தி அடிகள் இறந்த அன்று நான் பிறந்தேன்'' என்றான் மாண வன். ''இரண்டுமே வருத்தத்திற்குரிய விஷ யங்கள்'' என்று அவர் கூறியவுடன் எழுந்த சிரிப்பொலி அடங்க வெகு நேரம் ஆயிற்று.

— எஸ். வி. ராமன், சென்னை—1

## காசியில் விட்டது

மகாக் கஞ்சன் என்று பெயர் வாங்கியி ருந்த எங்கள் மாமா காசிக்குப் போய்த் திரும்பியிருந்தார். குறும்புக்காரனான என் தம்பி, ''காசியில் எதையாவது விட வேண்டு மாமே... நீங்கள் எதை விட்டீர்கள்?'' என்று கிண்டலாகக் கேட்க, ''அங்கே எல்லாமே விலை அதிகமாக இருந்ததால் உங்களுக்கு எல்லாம் ஏதேனும் வாங்கி வரவேண்டும் என்கிறஆசையைவிட்டுவிட்டேன்...'' என்று அதற்குச் சற்றும் குறையாத கிண்டலுடன் சொன்னார்.

— வி. நாகராஜன், சென்னை—78.

## ''நான் என்ன செய்யட்டும்!''

கே. ஜி. யில் படிக்கும் என் குழந்தை பிரசாந்த்தைப் பள்ளியில் விடச் சென்ற போது, அவன் சரியாகப் படிக்கவில்லை என்று டீச்சர் புகார் செய்ததும், ''படிக்க இஷ்டமில்லையென்றால் ஏன் தினமும் ஸ்கூலுக்கு வருகிறாய்?'' என்று கோபித்துக் கொண்டேன். அதற்கு அவன் பரிதாப மாக முகத்தை வைத்துக் கொண்டு ''நீங்கள் தான் தினமும் காலையில் கொண்டு வந்து விட்டு விடுகிறீர்களே! நான் என்ன செய் யட்டும்!'' என்றான். கோபத்தை மறந்து நான் சிரிக்க, டீச்சரும் என்னுடன் சேர்ந்து சிரித்தார்.

— ஜெ. லக்ஷ்மி, புது டெல்லி—23.

## ஆசிரியராயிருந்தால் இப்படியா...?

ஒருமுறை கி. வா. ஜ. அவர்கள் எங்கள் ஹிந்தி வகுப்பு ஆண்டு விழாவில் சொற் பொழிவு ஆற்ற வந்திருந்தார். அப்பொழுது ஹிந்தி ஆசிரியர் அவர் உட்காருவதற்குப் பிரம்பாலான நாற்காலியை எடுத்துப் போட் டார். உடனே கி.வா.ஜ. ''நீங்கள் ஆசிரிய ராக இருக்கலாம். அதற்காக எனக்குமா பிரம்படி கொடுக்கணும்!'' என்று தமக்கே உரிய சிலேடைப் பாணியில் சொன்னபோது வகுப்பறையே சிரிப்பில் ஆழ்ந்தது.

— வே. ஹேமமாலினி, கொடுமுடி.

## ராஜாவுக்கே முடியாதபோது......

கல்லூரிச் சம்பளம் கட்டாதவர்களின் பெயர்ப் பட்டியல் வகுப்பில் படிக்கப் பட்டது. அதில் ராஜா என்ற மாணவன் பெயரும் ராணி என்ற மாணவியின் பெய ரும் இருந்தன. அடுத்து வந்த பெயர் ஆண்டி யப்பன் என்பவருடையது. உடனே ஆசிரி யர், ''ராஜா ராணியே கட்ட முடியாத போது பாவம், 'ஆண்டி' நீ எப்படிப் பணம் கட்டுவாய்?'' என்றார்.

— எஸ். ராமனாதன், திருநெல்வேலி.

ப்ளோப்ளாஸ்ட் வழங்கும் வி. ஐ. பி. சூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறுபவர்:

என். சுந்தரராஜன்,
24, பிள்ளைமார் தெரு,
அருப்புக் கோட்டை,
காமராஜர் மாவட்டம்
— 626 101.

# மழை விழும் நேரம்

"ஜன்யா...!"

அவள் நிமிர்ந்து பார்த்தாள். விதானத்தில் பொருத்தியிருந்த அழைப்புக் கருவி மீண்டும் ஒலித்தது.

"ஜன்யா... நீங்கள் உடனடியாக அழைக்கப்படுகிறீர்கள். ஸெக்டார் 4173 எக்ஸ்... வெலாஸிட்டி 34537... ஸிக்னேச்சர் எம். ஜே. 3333..." கருவி உறங்கிப் போனது. ஜன்யா செய்தியை அப்படியே கைக்கருவியில் பதிவு செய்து கொண்டாள். மறுபடி ஒலிக்கச் சொல்லிச் சரிபார்த்துக் கொண்டாள்.

வெறும் எண்களின் சங்கேத சாம்ராஜ்யத்தில், கொஞ்சம் கோட்டைவிட்டாலும் காரியம் அவ்வளவும் குட்டிச்சுவராகிவிடும். எச்சரிக்கையுடனேயே அறையை விட்டு வெளியே வந்தாள். கைப்பையைத் திறந்து அந்தப் பச்சைநிற வில்லையை எடுத்துப் பார்த்தாள்.

கொஞ்சம் பழுப்பேறியிருந்த மாதிரி பிரமை தட்டியது. அருகில் தென்பட்ட சோதனைப் பெட்டியில் செருகி, வில்லையின் சக்தியை அறிய விரும்பினாள். அரைவிநாடி வில்லை 'கிர்' ரென்று சுழன்று நின்றது. இண்டிகேட்டரில் 'பதினேழாயிரம் கி.மீ.' காட்டியது.

நிம்மதியாக மூச்சுவிட்டாள். கனமான கூரைக் கதவைத் தள்ளிக் கொண்டு புறவெளிக்கு மேலே வந்தாள். பாதுகாப்புக் கவசத்தை முழுவதுமாக இழுத்துவிட்டுக் கொண்டாள். புழுதிக் காற்றின் ஒலம் அச்சுறுத்தியது.

பழகிப்போன அச்சங்களை விழுங்கிக் கொண்டு நடந்தாள். அருகில் தென்பட்ட சூரிய விசைக் கார் ஒன்றை நெருங்கினாள். பச்சை வில்லையைக் காரின் கதவுப் பிளவில் செலுத்தினாள். கார்க் கதவு திறந்து கொண்டு இவளுக்கு வழிவிட்டது. உள்ளே நுழைந்து இருக்கையில் அமர்ந்த சுருக்கில் மூடிக் கொண்டது.

காரின் இருக்கை பெல்ட்டுகளை நன்றாகச் சேர்த்துத் தன்னைப் பிணைத்துக் கொண்டாள். கார் பறந்தது. தரையிலும் படாமல் வானிலும் பறக்காமல் சுகமாக ஒரு வேகம். தங்கு தடையே இல்லாமல் பூமிப் புழுதியைக் கிழித்துக் கொண்டு ஒரு பயணம்.

நிலத்தடிப் பெருச்சாளி வாழ்க்கை வெகுவாய் அலுத்துப் போய்விட்டது அவளுக்கு. பூமிப்பந்தின் மேல்தளத்துக்கு வருவதற்கு நிர்வாகம் அவ்வளவாய் யாரையும் அனுமதிப்பதில்லை. கதிரியக்கம், காற்றுக் கேடு, புறச்சூழல் அபாயங்கள் என்று எத்தனையோ காரணங்களைச் சொல்லி இப்படி நிர்வாகம் தடைபண்ணிவிட்டது.

இதுபோல் மானிட்டரில் தகவல் வருகிற அபூர்வமான நேரங்களில்பூமியின் மேல்தளத்துக்கு வந்து தொலைதூரப் பயணம் மேற்கொள்ள முடிகிறது. பலநூறு ஆண்டுகளாக நடைபெற்ற பகைமைப் போர்கள், பலப் பரீட்சைகளின் விளைவாக உலகம் நாசப்பட்டுவிட்டது.

கார் புறப்பட்ட ஆறாவது மணி நேரத்தில் மூவாயிரம் கிலோ மீட்டர் தொலைவில் அந்த ஸெக்டார் 4173 எக்ஸ் நிலையத்தில் இவளுடைய கார் போய் நின்றபோது அவன் எதிர்கொண்டு வந்து நின்றான்.

காரை விட்டு இறங்கிக் கதவை மூடிய வேகத்தில், சக்தி வில்லை அவள் கையில் வந்து விழுந்தது. அதை அவன் வாங்கிப் பார்த்தான்.

"ஹாய் டியர்! களைப்பா...?"

"இல்லே டியர்! ஆறு மணி நேரம்தானே.. சுகம்தான்..."

ஆனால் அவள் களைத்தே போயிருந்தாள். உடல், மனம் எல்லாவற்றிலும்தான். சம்பிரதாயமான சின்னஞ்சிறு பொய்கள். அவன் புரிந்து கொண்டு சிரித்தான்.

பரிவுடன் அவளை அணைத்தவாறே நிலவறைக் கதவைத் திறந்து கொண்டு கீழே இறங்கினான். கவச உறைகளைக் கழற்றி வீசினான். அவளுக்கும் உதவி செய்தான்.

சுகமான குளியல் முடிந்து மருந்து மணம் கமழ இருவரும் மாற்று உடைகளில் தஞ்சம் புகுந்தவரை பேச்சே இல்லை.

அபார்ட்மெண்டின் கண்ணாடிக் கதவுக்குள்ளேயிருந்து கைஆட்டினான் ஜூனியர். கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனபோது... 'ஹாய் மம்மீ...' என்று கூவிக் கொண்டு வந்து கட்டிக் கொண்டான்.

வெகு இயல்பாக அவளருகே வந்து மெலிதான ஊசியைத் தோளில் ஏற்றித் தடுப்பு மருந்தை ஆயா செலுத்துகிற வரை ஜன்யாவுக்கு எல்லாம் மறந்து போய் இருந்தது... ஊசி மருந்தின் குறுகுறுப்பு உணரப்பட்டபோதுதான் ஜூனியரின் நிஜமான நினைவு அவளுக்கு வந்தது.

ஜூனியர் அவளை விட்டு விலகிப் போய் பொம்மைகளுடன் விளையாடப் போனான். அதுதான் அவனுடைய நிரந்தர உலகம்.

'ஹாய் டாடி... ஹாய் மம்மீ...' சொல்லுவான். பசி வந்தால் ஆயாவை அழைக்க

சுப்ரபாலன்

பஸ்ஸரை அமுழ்த்துவான். தூங்குவான். அவனுக்கு வயது பதினாறு!

ஜூனியரைப் பற்றிய அந்த நிஜமான நினைவு வந்தபோது அவள் விம்மினாள். அழைப்பின் அவசரம் என்ன என்று புரிந்த மாதிரி அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

"ஆம் டியர்! இவனுக்குத் தேதி குறித்து விட்டார்கள். இன்னும் தொண்ணூறு மணி நேரங்கள்தான். இவன் விளையாட, சாப்பிட, தூங்க என்று அனுமதிக்கப்படுவான்... அப்புறம்..." அவன் கூரையைப் பார்த்தான்.

"சுத்தக் காட்டுமிராண்டிகள்... ஏற்கெனவே ஒண்ணை அனுப்பியாச்சு. இவனையும் அதே வழியிலா? நான் அனுமதிக்க மாட்டேன்." — அவள் கூச்சல் போட்டுக் கத்தினாள்.

"நம்மால் என்ன செய்ய முடியும் டியர்! சட்டம் அது தானே. குறைபாட்டுக் குழந்தைகளைக் குணப்படுத்த எவ்வளவோ முயற்சிக்கிறார்கள். எதுவுமே பலன் தராமல் போகிற போது அழித்து விடுவது ஒன்றுதான் நிர்வாகத்துக்கும் சரி, நமக்கும் சரி — ஏற்பட்ட வழி என்று ஆகி விட்டது. இதை மீறி நாம் என்ன செய்யப் போகிறோம்? இனிமேல் ஜூனியர் இருந்தால் அவனுக்கும் கெடுதல்... நமக்கும்...



பட்டென்று அவனுடைய கன்னத்தில் ஓங்கி அறைந்தாள் ஜன்யா. வேதனையோடு சிரித்தான்.

அவள் முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதாள். பொம்மை விளையாட்டைப் போட்டு விட்டு இவர்களைப் பார்த்துச் சிரித்தான் ஜூனியர்.

"உன்னுடைய வேதனை புரிகிறது ஜன்யா. இனிமேல் ஒரு குழந்தையைப் பெற்றுக் கொள்ள நமக்கு அனுமதியில்லை. பெற்ற இரு குழந்தைகளையும் சுதந்திரமாக நாமே வைத்துப் பாராட்டிச் சீராட்ட நிர்வாகம் அனுமதிக்கவில்லை. பிறப்புக் கோளாறுகள். கதிரியக்கத் தொற்று நோய்கள் என்று காரணம் சொல்லி இரண்டு குழந்தைகளையும் தன் பொறுப்பில் எடுத்துக் கொண்டு பெற்றவர்களை அந்நியமாக்கி விட்டார்கள். இன்னும் பத்தாண்டுகளானாலும் இவன் தேறப் போவதில்லை என்று கம்ப்யூட்டர் சொல்லி விட்டது. இனி இந்த 'ஸ்கிராப்'பை அழித்துவிடப் போகிறார்கள்...

"நாசகாரப் பாவிகளே...!" என்று மறுபடியும் கத்தினாள் ஜன்யா.

"இவர்களைச் சபிக்காதே ஜன்யா... நம்முடைய மூதாதைத் தலைமுறைகளைச் சபி... அந்த நூற்றாண்டுகளில், அவர்கள் நடத்திய அரசியல் ஆதிக்க வெறி விளையாட்டுக்களின் பலனை இன்று நாம் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம்... அவ்வளவுதான்...!" அவன் கண்களில் நீர் பனித்திருந்தது. கன்னத்தில் ஜன்யாவின் விரல் பதிவு சிவப்பாகத் தெரிய ஆரம்பித்தது. பரிவோடு அவன் கன்னத்தைத் தடவினாள் ஜன்யா.

ஆயா நெருக்கே வந்தாள்.

"அம்மா! என் கடமை முடிந்து விட்டது. நான் தலைமையிடத்துக்குப் போக வேண்டும். இந்தக் கடைசி நேரங்களில் குழந்தையைப் பார்த்துக் கொள்ள நீங்கள் அனுமதிக்கப்பட்டிருக்கிறீர்கள்..." இயந்திரமாக அவள் பேசிக் கொண்டு போனாள்.

"எனக்கு வேறு என்ன உத்திரவு? வழக்கப்படி ஊசிகள் மருந்துகள் என்று பட்டியல் தரப் போகிறாயா?"

"இல்லையம்மா... குழந்தைக்கு இனிமேல் மருந்து ஏதும் கிடையாது. தொண்ணூறாவது மணியில் முனிஸிபல் வண்டி அனுப்புவார்கள். ஏற்றி அனுப்பிவிடுங்கள். அதுவரை நீங்கள் எங்கு வேண்டுமானாலும் இவனுடன் போய் வரலாம். உணவுப் பட்டியல் இருக்கிறது. உங்களுக்கு இன்னும் இரண்டு தடுப்பு ஊசிகள் போட வேண்டும். நாளை ஆட்கள் வருவார்கள். எங்கே போனாலும்... தொண்ணூறாவது மணியில் இங்கே வந்து விடுங்கள்..." இயந்திரப் பேச்சை முடித்துக் கொண்டு அவள் நகர்ந்தாள். அடுத்த முகாமில் இது போல் இன்னும் ஒன்றைக் கவனிக்க அவள் அனுப்பப்படுவாள்.

சூரிய ஆற்றலைச் சின்ன யாத்திரையில் தேக்கி வைத்துக் கொண்டு அதன் உதவியுடன் காரில் பல ஆயிரம் கிலோமீட்டர்கள் பயணம் போக முடிந்த காலத்தில், பாதுகாப்புக் கவசம் அணியாமல் வெளியே வர முடியவில்லை. கதிரியக்கத் தூசுகள் தோலைக் கிழித்து, இரத்தத்தில் இறங்கிவிட்டால் கதை முடிந்து விடுகிறது. ஜூனியர் மாதிரி காய்கறிக் குழந்தைகள்; என்ன நடக்கிறது என்று தெரிந்து கொள்ளாமலே மடியப் போகிற ஜீவன்கள்.

"கவலைப்பட்டு ஏதும் ஆகப் போவதில்லை ஜன்யா. அவனுக்கும் உடை மாற்றிக் கொண்டு கவசம் அணிவித்து வெளியே அழைத்துப் போ... இருக்கிற சில மணி நேரங்களை அவனுடன்..."

"நான் விடப் போவதில்லை டியர். மீறப் போகிறேன்... முடியுமானால் பிரஸிடெண்டிடம் இவனைக் கொல்லக் கூடாது என்று சொல்லி விதிவிலக்குப் பெறப்பாருங்கள். இல்லையென்றால்..."

"எல்லாம் முடிந்துவிட்டது ஜன்யா. இந்த விஷயத்தில் கண்டிப்பாக விதியைத் தளர்த்த முடியாது என்று உத்தரவாகிவிட்டது. நாற்பது மணி நேர அனுமதியை நமக்காகத்தான் தொண்ணூறு மணியாக உயர்த்தியிருக்கிறார்கள், பெரிய மனசு பண்ணி..."

குழந்தையைத் தூக்கிக் கொண்டான். ஆயாவின் குறிப்புக்களின்படி உடம்பைத்

துடைத்துவிட்டு மருந்து தடவினாள். பசை உணவுகளைக் கொஞ்சம் கையில் எடுத்துக் கொண்டாள். கவச உறையில் குழந்தையைத் திணித்தாள்... 'பதினாறு வயசில் நாலு வயசுக் குழந்தை மாதிரி வளர்ச்சி...' என்று தனக்குள் முணுமுணுத்தாள். 'ஆனாலும் குழந்தையை அழிப்பதாவது...'

கவச உறைக்குள் அகப்பட்ட ஜூனியரின் கண்கள் வெகு பிரகாசமாக மின்னின. ஒரு விதமான மிரட்சி தெரிய 'மம்மீ' சொன்னது. இந்தக் குரலும், இந்த அழைப்பும் இன்னும் எத்தனை மணி நேரங்களுக்கு என்று நினைத்த போது அவளுக்கு வேதனையாக இருந்தது. எட்ட இருந்தே எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான் அவன். ஜன்யாவைப் போல் தடுப்பு மருந்து எடுத்துக் கொண்டு கூடக் குழந்தையைத் தொட அவனுக்கு அனுமதியில்லை.

இரண்டு வாய்ப்புக்களும் கைநழுவிப் போய் விட்டன. இனிமேல் தங்களுடைய தலைமுறைத் தொடர்ச்சிக்கு வழியில்லை. வேதனை அவனையும் அழுத்தியது. ஆண்மையின் ஸ்கையாலாகாத்தனம் இந்த யுகத்தின் நியாயமாகிவிட்டது. மனசுக்குள் ஒரு வெறுமை சூழ்ந்தது... இவள் எங்காவது குழந்தையுடன் ஓடிவிடுவாளோ என்றும் அவனுக்குப் பயமாக இருந்தது.

''ஜன்யா! அசட்டுத்தனமாக ஏதாவது செய்துவிடாதே... போன வாரம் இதேபோல் மிருத்யூ அவளுடைய குழந்தையுடன் தப்பிப் போக முயன்ற போது, இருவரையும் அப்படியே ஆவியாக்கிவிட்டார்கள். அவர்களுடைய பார்வையிலிருந்து தப்பவே முடியாது. இப்போது நாம் பேசுவதைக் கூட நிர்வாகம் கேட்டுக் கொண்டிருக்கும்...'' என்று எச்சரித்தான்.

தளத்தைவிட்டு மேலே வந்தான். அவசரத்தில் கவச உறையைச் சரிவர மூடாததால் புறங்கையில் 'சுரீர்' என்றது. அதை அலட்சியப்படுத்தினான்.

வெளியே இருட்டு நன்றாக மெழுகியிருந்தது. காற்றின் ஊளைச் சத்தம் இப்போது குறைந்திருந்தது. நட்சத்திரங்கள் புலப்படாமல் புழுதிப் படலம் மேலே மறைத்துக் கொண்டிருப்பதை உணர முடிந்தது.

இனிமேல் என்ன செய்வது?

நெஞ்சைப் பிடித்துக் கொண்டு மறுபடியும் கீழே இறங்கினான். தூங்க வேண்டும் போலிருந்தது. உறையைக் கழற்றிவிட்டு, ஒரு மாத்திரையை எடுத்து விழுங்கினான். எரிச்சல் ஏற்பட்டிருந்த புறங்கையில் மறமறத்தது. மருந்து நீரில் கையைக் கழுவி, எரிய எரிய ஒரு திரவத்தைப் பூவாகப் பொழிய வைத்துக் கொண்டான்.

அவ்வளவையும் பார்த்த ஜன்யா மௌனமாக அழுதாள். குழந்தையை எடுத்துக் கொண்டு வெளியே புறப்படுகிற நேரத்தில் அவன் தூங்கிப் போயிருந்தான். இந்த மாத்திரைத் தூக்கம் மூன்று மணி நேரம் அவனை விடாது.

''டாடி...'' என்றது குழந்தை...

கணவனின் அருகே சென்று அவனுடைய நெற்றியில் பூவாக முத்தமிட்டாள். வெளியே புறப்பட்டாள். குழந்தையுடன் தளத்துக்கு மேலே வந்தாள். புதிய சூரிய வில்லையை எடுத்தாள். பத்தாயிரம் கிலோ மீட்டர் பயணத்துக்கு இது போதும். கைப்பெட்டியிலிருந்து வரை படத்தை எடுத்துப் புரட்டினாள். ஓர் இலக்கு அவள் மனத்தில் பதிந்தது.

விசைக்காரில் ஏறி அமர்ந்து, ஜூனியருக்கும் தனக்கும் பெல்ட்டைக் கட்டிக்கொண்டு அவள் புறப்பட்ட போது காரின் உள்ளே மானிட்டர் ஒலித்தது...

''நீ இறுதியாக எச்சரிக்கப்படுகிறாய். உனக்கு அனுமதிக்கப்பட்ட தொண்ணூறாவது மணியில் உன்னுடைய செக்டாரில் இல்லாவிட்டால் நீ அழிக்கப்படுவாய்...''

அறிவிப்பை அலட்சியப்படுத்தினாள். வழக்கமான வேகத்தை இன்னும் கூடுதல் ஆக்கினாள். 'செக்டார் இஸட் 937' ஐ நோக்கி வண்டி பறந்தது.

அங்கே மனிதர்கள் யாரும் அனுமதிக்கப்படுவதில்லை... முள்வேலிக்கு அப்பால் அது ஒரு பூலோக நரகம். உள்ளே தப்பித் தவறிப் போகிற எவரும் நிர்வாகத்தின் தண்டனைக்கு உட்பட வேண்டிய அவசியமில்லை. அவர்களே அழிந்து விடுவார்கள். அவ்வளவு கொடுமையான கதிரியக்கப் பகுதி அது. ஒரு காலத்தில் மனிதர்கள் வாழ்ந்து இப்போது தடுக்கப்பட்டு விட்ட பகுதி. பழைய தலைமுறைகள் கதிரியக்கச் சோதனைகளால் சீரழித்த நிலப்பகுதி அது.

சாகப் போகிறோம் என்பது தெரிந்தே அவள் போனாள். குழந்தையுடன் தொண்ணூறு மணி நேரம் என்பது இன்னும் கொஞ்ச நேரம் நீண்டு போகாதா என்கிற ஆசை...

வழியில் வானம் இருண்டது... அபூர்வமாக மின்னல் வெட்டியது... மழை?

வண்டியின் வேகத்தைக் குறைத்தாள். பூவாகத் தூறல் இறங்கியது. அவளுக்கு நினைவு தெரிந்து பார்த்ததில்லை. வீடியோப் பதிவுகளில்தான் இந்த மழையின் நிழல்களைப் பார்த்திருக்கிறாள்.

பெரும்பாலும் வானத்திலேயே ஆவியாகித் திரும்பிவிடுகிற மழை, தரையைத் தொடுவது என்பது அரிதான காட்சி. சற்று மெய் மறந்தாள்...

அங்கே அவன் மாத்திரைத் தூக்கத்திலிருந்து விடுபட்டபோது, அறையில் ஜன்யா இல்லை... ஜூனியர் இல்லை... அச்சம் பிறந்தது.

மானிட்டர் ஒலித்தது. ''அவர்கள் தப்பியோடுகிறார்கள்... அழிக்கப்படுவார்கள்...''

'பாவிப் பெண்ணே' என்று தலையில் அடித்துக் கொள்ளக் கையை உயர்த்திய போது —

அவனால் முடியவில்லை... புறங்கையில் நன்றாக ரத்தம் கசிந்தது... கால்கள்...

கை எல்லாம் வீங்கிக் கனத்தன... அவனுக்குப் புரிந்தது. கண்கள் இருண்டு வந்தன.

ஜென்யாவுக்கு வியப்பு... மானிட்டர் அறிவிப்பைத் தொடர்ந்து காரை நோக்கிப் பாய்ந்து வந்த ஏவுகணை பாதியிலேயே வெடித்தது எப்படி என்று அவளுக்குப் புரியவில்லை.

விசையைக் கூடுதலாக்கி, அந்த அபாய ஸெக்டாருக்குள் நுழைந்த போது ஜூனியர் நன்கு உறங்கிப் போயிருந்தான்.

ரேடியோவில் செய்தி வந்தது.

"மழை! இடி மின்னல் எல்லாம் புதிய செய்திகள். அறுபது ஆண்டுகளுக்கு அப்புறம் பூமி நனைகிறது... ஸெக்டார் பதினேழில் ஒரு மின்னல் தாக்கி ஏவுகணை வெடித்தது...

கதவைத் திறந்து கொண்டு வெளியே இறங்கினாள். காற்று இல்லை. வெப்பம் தெரியவில்லை. அறிவிப்புப் பலகையில் புழுதி படிந்து படிக்க முடியாமல் கிடந்தது.

திரும்பவும் காருக்குள் தன்னை அடக்கிக் கொண்டாள். பயமாக இருந்தது. தொண்ணூறு மணிக்கு முன்பே மரணம் வந்து விடுமோ?

அவன் நினைவில் வந்தான். அவனிடம் சொல்லாமல் வந்தது எவ்வளவு தவறு என்பது புரிந்த போது அழுகையாக வந்தது.

காருக்குள் ஜூனியர் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தான்.

ஒரு முடிவுக்கு வந்தாள். கவச உடைகளைக் கழற்றி வீசினாள்.

இங்கேயும் வானம் இருண்டது. பூவாக மழை இறங்கியது. தூறல் அவளை நனைத்த போது இதமாக இருந்தது. ஊசி இறங்குவது போன்ற உணர்வுகள் இல்லை. புதிய அனுபவமாகத் தோன்றியது. புது மழை அவளுக்கு நம்பிக்கையூட்டியது.

உடைகளையும் கழற்றி முழுவதுமாக நனைந்தாள். ஜூனியரையும் இழுத்து உறக்கம் கலைத்தாள். கவசங்களை வீசிவிட்டு அவனையும் நனையப் பண்ணினாள்.

அது இன்னும் 'மம்மீ...' சொன்னது...

மழைத்தூறல் இன்னும் வலுத்தது. விசைக் காரின் அருகே போய் மானிட்டர் மூலம் அவனுடன் தொடர்பு கொண்ட போது —

ஸெக்டாரில் அவனை எரித்துச் சில மணி நேரங்கள் ஆகியிருந்தன.

அழுதாள்... ஜூனியர் இன்னும் சிரித்துக் கொண்டே மழையில் நனைந்தான்.. மின்னல் வெட்டியது!

காத்திருந்தாள்.

எதற்கு?

மரணத்துக்கா? அல்லது மழை காரணமாக முளைவிட்ட நம்பிக்கை, துளிர் இலையாக விரியவா?

---

என்ன காரியம், கடமை பண்ணினாலும் பாரத்தை அவன் தலையில் போட்டு விட வேண்டும். பட்டுக் கொள்ளாமல், ஆனாலும் பெர்ஃபெக்டாகப் பண்ண வேண்டும். இதுதான் நிஷ்காம்ய கர்மா. அவன் தலையில் போடுவது என்பதுதான் பக்தி. அப்புறம் அவனுடைய தலையிலே போட எந்த பாரமும் இல்லாமல் ஜீவனுடைய கர்மச் சுமை முழுதும் தீர்ந்து போய்விடும். 'தான் எதுவும் பண்ணாதவன், தன்னை எதுவும் என்னவும் பண்ண முடியாது' என்ற நிலைக்கு ஜீவன் வாஸ்தவமாகவே போய்விடுவான்.

அப்புறம் இவனுக்குப் பாரம் தெரியாமலே ஈச்வரன் இவன் மூலமாக லோக க்ஷேமத்துக்காக அநேக கார்யங்களைச் செய்தாலும் செய்விக்கலாம். ஜனகர் ராஜ்ய 'பாரம்' வஹித்தது கூட இப்படித்தான். ஆனால் அவருக்கு அது பாரமாகவோ, தாம் அதை வஹிப்பதாகவோ எண்ணம் இருந்தே இருக்காது. 'தூக்கத்தில் பால் குடிக்கிற குழந்தை' என்று சொன்னாற்போல கார்யம் செய்வதாகத் தெரியாமலே செய்கிற உத்தம நிலை அது. இப்போது நமக்குக் கொஞ்சமும் எட்டாத நிலை. "தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவதெக்காலம்?" என்று பத்ரகிரியாரைப் போன்ற பரம வைராக்கியசாலிகளே குறிப்பிடுவதான, கர்த்தா உணர்ச்சியில்லாமலே கார்யம் செய்வதான அந்த நிலை நமக்கு ரொம்பவும் தள்ளி எக்காலத்திலோ ஏற்பட்டால்தான் உண்டு.



அருள்வாக்கு

நாம் செய்ய வேண்டியதான இந்தக் கர்மாநுஷ்டான உபாஸனைகளிலேயே அதிகப் பிடிப்பு, அதாவது ஆசைப்பற்று ஏற்படுவதற்கு விடக் கூடாது. ஆசை வந்து விட்டாலே அப்புறம் அனர்த்த பரம்பரைதான் என்பதால்தான் ஆரம்பத்திலிருந்தே, 'இது அத்தனையும் கூட தவிர்க்க முடியாத மாயைதானே தவிர அஸல் ஸத்யமில்லை; இவையும் இல்லாத ஆத்மாவே நம் லக்ஷ்யம்; அதை நேரே பிடிக்க முடியவில்லை என்பதால்தான் இவற்றைக் கொண்டு பிடிக்க முயற்சி பண்ண வேண்டியதாயிருக்கிறது' என்ற அத்வைதமான ஸ்மரணையைத் துளியாவது வைத்துக் கொள்ள வேண்டுமென்பது.

ஆத்ம தரிசனம் கிடைக்கணுமானால் அழுக்கடைந்தும் ஆடிக் கொண்டேயிருப்பதுமான நம்முடைய சித்தம் சுத்தமாகவும் நிலையாய் நிற்பதாகவும் ஆக வேண்டும். அழுக்கு ஜலத்திலே, அலைகள் ஆடிக் கொண்டேயிருந்தால் அடியிலே இருப்பது தெரியாதல்லவா? அப்படித்தான் இதுவும். சித்த அழுக்குப் போக கர்மா; அதன் ஆட்டம் நிற்க பக்தி.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# இந்தியா முழுதும் பெருகி வளர்ந்து வரும் சிங்க்ளேர் உரிமையாளர்களுக்கு எங்களின் உணர்ச்சி மிக்க ஒரே வார்த்தை "நன்றி"



சிங்க்ளேர் எங்கும் இருப்பது மேலும் மேலும் அதிக வீடுகளில் அதிக மக்கள் சிங்க்ளேரையே நாடுகிறார்கள்.

சிங்க்ளேரின் தொழில் நுட்பம் பற்றியோ எதுவும் கூறத் தேவையில்லை. அது கலைத்திறனின் உன்னதப் படைப்பாகும். அழகிய இல்லங்கள் தோறும் வரவேற்பு அறைகளில் அமைதியான அழகுடன் சிங்க்ளேர் கலர் டி.வி. செட்டுகள் அலங்கரிக்கின்றன.

சிங்க்ளேரின் முன்னணி ரெண்டிக் தொழில் நுட்பமும் நேர்த்தியாக வடிவமைக்கப்பட்ட அம்சங்களும் இணைந்து கண்ணுக்கு விருந்தான காட்சிகளை ஆண்டாண்டு காலத்திற்கு அளித்தவாறு உங்கள் இல்லத்தோடு ஒன்றிய பகுதியாக ஆகிவிடுகிறது.

சிங்க்ளேர் சாலஞ்சர் — துரிதமாய்த் துவங்கும் பிக்சர் டியூப் — மென்மையான (ஸாஃப்ட்டச்) எலக்ட்ரானிக் ட்யூனிங் — மற்றும் பல முன்னணி அம்சங்கள்.

**ஒரு புத்தம் புதிய மாருதி காரை உங்கள் உரிமையாக்கிக் கொள்ள அரிய வாய்ப்பு! மற்றும் ஏராளமான உன்னத பரிசுகள் இலவசம், வாய்ப்பு இன்னமும் உள்ளது!**

மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள விற்பனையாளரை அணுகுங்கள்.



**Sinclaire**
**Challenger**

**பரிசுகள்**

*1 மாருதி கார்   2 ஹோண்டா மோட்டார் சைக்கிள்   5 வீடியோ கேம் செட்டுகள் 150 பாக்கெட் ரேடியோக்கள்*









**Prestige Plus Performance**

Adwave/STPL/Tam/1/86



# கிழக்கே ஓர் உலகம்







* ஆஸ்திரேலியாவுக்கே பிரத்தியேகமாக உரிய மிருகங்கள், பறவைகள்.



* சார்ல்ஸ் இங்கில்ஸ்.

## 18. பிரிட்டிஷ் ராணிக்கே முதல் மரியாதை!

ஒரு ஆஸ்திரேலியப் பண்ணை வீட்டுக்குச் சென்று பார்க்க வேண்டும் என்ற என் விருப்பத்துக்கிணங்க திரு வாலஸ், சார்ல்ஸ் இங்கில்ஸ் என்ற ஒரு பண்ணையாரின் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.

வழிநெடுகிலும் ஜன நடமாட்டமே இல்லை. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை அடர்ந்த மரங்கள், செடிகள் அல்லது புல்வெளிகள் தான். மிக அழகான தோட்டத்துக்கு நடுவில், ஆங்கிலேய கிராமப்புறப் பாணியில் ஓர் அழகிய வீடு. சார்ல்ஸ் இங்கில்ஸ் கேட்டருகே காத்திருந்து பெரிய புன்னகையுடன் என் கையைக் குலுக்கியபடி, "நான் ஒரு வயதான அம்மாளை எதிர்பார்த்திருந்தேன்," என்று வரவேற்றார். "தமிழ் எழுத்தாளர் என்று அறிகிறேன். இவருடைய ஆங்கிலம் எப்படி?" என்றார் வாலஸ்ஸிடம்.

"முதல் தரம்!" என்று வாலஸ் சிரித்தார்.

"அப்பொழுது கவலையில்லை!" என்று உள்ளே அழைத்துச் சென்று வரவேற்பறையுடனேயே ஒட்டியிருந்த சமையல் பகுதிக்குச் சென்று, "என் மனைவி டவுனுக்குக் காரியமாகப் போயிருக்கிறாள், மன்னியுங்கள்" என்று தேநீர் தயாரித்துக் கொண்டு வந்தார்.

கச்சிதமான எளிய அந்த அறையில் அமர்ந்து தேநீரைப் பருகியபடி வெளிப்புற இயற்கை அழகைப் பார்க்கும் போது அந்த அமைதியும் அழகும் ஏதோ கற்பனை உலகத்தைப் போல் இருந்தது. "நான் வெறும் பண்ணைக்காரன்" என்று அடக்கத்துடன் சொன்ன இங்கில்ஸுக்கு இலக்கியத்திலும் நாடகத் துறையிலும் நல்ல ஈடுபாடு இருந்தது, பேச்சில் தெரிந்தது. நிறையப் பிரயாணமும் செய்திருப்பதாகச் சொன்னார். இந்தியாவுக்கு ஒருமுறை வந்திருப்பதாகக் குறிப்பிட்டார்.

"என்ன மாதிரியான அபிப்பிராயம் உங்களுக்கு ஏற்பட்டது இந்தியாவைப் பற்றி?" என்றேன்.

அவர் முகத்தில் மெல்லிய சங்கடம் தெரிந்தது. "ஆக்ராவையும், தில்லியையும் மட்டும் தான் பார்த்தேன். இந்தியாவைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் எனக்கு ஒரே ஒரு எண்ணம்தான் ஏற்படுகிறது. அங்கு இரக்கம் என்பது இல்லை. மனிதத்தன்மை இல்லை.."

"எதனால் இப்படிச் சொல்கிறீர்கள்?" என்றேன் நான் திடுக்கிட்டு.

"ஒரே ஒரு சம்பவம் — தாஜ்மஹாலைப் பார்த்துக் கொண்டிருந்தோம் ஒரு கைடின் துணையுடன். இடையில் ஒரு சிறுவன் புகுந்து

தான் கைடாக வருவதாகச் சொன்னான். எங்களுடைய கைடுக்கு வந்த கோபத்தை என்னால் இன்னமும் புரிந்து கொள்ள முடிய வில்லை. கண்மண் பாராமல் அந்தச் சிறு வனை அடித்துத் துரத்தினான். மிகச் சாதா ரண ஒரு காரணத்துக்காக இத்தனை கொடூர மாக நடந்து கொள்ள வேண்டுமா? தாஜ் மஹாலின் அழகே எனக்கு மனத்தில் பதிய வில்லை இந்தச் சம்பவத்தால்!''

என் முகம் வாடிப் போனதைக் கண்டு இங்கில்ஸ் அவசரமாகத் தொடர்ந்தார்: "மன்னியுங்கள். எனக்கேற்பட்ட அனுபவம் அது. நான் வேறு எங்கும் அப்படிப்பட்ட வன்முறையைப் பார்த்திராததால் அது என்னை அதிகமாகப் பாதித்தது. மக்கள் தொகையும் ஏழ்மையும் அதற்குக் காரண மாயிருக்கலாம்.''

அவை மட்டும் காரணமல்ல என்பது எனக்குத் தெரிந்திருந்தது. மனிதனை மனிதன் ஒதுக்கும்,நாயை விடக் கேவலமாக நடத்தும், பிறப்பில் உயர்வு தாழ்வு பார்க்கும் ஒரு உளுத்துப் போன சமூக அமைப்பின் சாயை களாக நம்முள் மனிதாபிமானம் மடிந்திருக் கிறது. சுதந்திரம் பெற்று முப்பத்தெட்டு ஆண்டுகளாகியும் இன்னமும் அனைவருக் கும் கல்வி என்பது பகற் கனவாகவே இருக் கிறது. கற்பிக்கப்படும் கல்வியோ நமது உயர் பண்பாடுகளை உயிர்ப்பித்து வளர்ப்ப தாக இராமல் குழிதோண்டிப் புதைப்பதாக உள்ளது. இந்த ஆஸ்திரேலியரிடம் அதை யெல்லாம் விவரித்துக் கூறிக் கொண்டிருக்க முடியாமல் ஒரு அலுப்பும் சலிப்பும் என்னை ஆட்கொண்டது. எனவே ஒரு பெருமூச் சுடன், "உங்களுக்கு ஏற்பட்ட அனுபவத்திற் காக வருந்துகிறேன். அந்த ஒரு அனுபவத்தை வைத்து இந்தியாவை எடை போடாதீர்கள். மறுபடி இந்தியாவுக்கு வாருங்கள். நல்ல நினைவுகளோடு திரும்பிச் செல்வீர்கள். நான் தென் நாட்டை உங்களுக்குச் சுற்றிக் காண் பிக்கிறேன்'' என்றேன்.

பொதுவாக இந்தியாவின் முன்னேற்றத் தைப் பற்றியும், கொள்கைகளைப் பற்றியும் பேச்சு வந்தது.

"இந்தியா எவ்வளவோ முன்னேறி விட்டது. இருநூறு வருஷங்கள் அந்நிய ஆட்சி யில் அடிமைப்பட்டு சூறையாடப்பட்ட நாடு சுதந்திரம் வந்து நாற்பது வருஷத்தில் மேற்கு நாடுகளைப் போன்ற நிலையை எட்டிவிட முடி யாது. ஜனத்தொகை, ஏழைமை, பல மொழி கள் என்று வேறு பல தேசங்களில் இல்லாத எத்தனையோ பிரச்னைகள் எங்களுக்கு உண்டு. எங்கள் முன்னேற்றத்தை நீங்கள் இரண்டு விஷயங்களை நினைவில் வைத்துக் கொண்டு கணிக்க வேண்டும். எவ்வளவோ அரசியல் கொந்தளிப்புகளுக்கு இடையிலும் நாங்கள் உண்மையான ஜனநாயகத்தைக் காத்து வருகிறோம். இரண்டாவது, எந்த வல்லரசுடனும் நாங்கள் இணையவில்லை. யாருடைய பணத்தையும் நாங்கள் நன் கொடையாகப் பெறவில்லை. ராணுவத் தள வாடங்கள், நவீன இயந்திரங்கள் போன்ற

வாஸந்தி



* இருநூறு ஆண்டுகளின் முன்னேற்றத்தைப் பிரதி பலிக்கும் விண்ணளாவும் கட்டிடங்கள் — ஸிட்னி.

எந்தப் பொருளையும் இலவசமாக அடைய வில்லை. இதனாலேயே எங்கள் குரல் உலக அரங்கில் மதிக்கப்படுகிற அளவில் உயர்ந்து இருக்கிறோம்'' என்றேன்.

''ஸ்டீவர்ட்! நம்முடைய அரசும் இந்தக் கொள்கையைப் பின்பற்றினால் எத்தனை நன்றாயிருக்கும்!'' என்றார் இங்கில்ஸ். ''நாங்கள் இன்னமும் பிரிட்டிஷ் ராணிக்குத்தான் முதல் மரியாதை செலுத்துகிறோம்!

பண்ணையைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினோம். இங்கில்ஸுக்கு ஒரே மகன். திருமணம் ஆனதும் பண்ணையிலேயே வேறு ஒரு வீடு கட்டிக் கொண்டு 'இருக்கிறார். அவரும் பண்ணையில்தான் வேலை செய்கிறார். ''இருபத்தி நாலு மாடுகள் இருக்கின்றன. இரண்டு முறை பால் கறப்போம். 'கான்'களில் ஸீல் செய்து லாரியில் டவுனுக்கு அனுப்பி விடுவோம்'' என்றார் இங்கில்ஸ்.

நம்ம ஊர் பண்ணையின் நினைவில் நான் நிறைய ஆட்களை எதிர்பார்த்தேன். கொழு கொழுவென்று இருந்த மாடுகளைத் தவிர வேறு ஈ, காக்கை இல்லை! அழுக்குப் பாண்ட், ஷர்ட் அணிந்து இங்கில்ஸின் மகன் வந்தார். கையைக் கழுவிக் கொண்டு வந்து என் கையைக் குலுக்கினார்.

''உங்கள் அப்பாவின் பண்ணையை நீங்களும் தொடர்ந்து கவனிப்பது ரொம்ப விசேஷம்'' என்றேன் நான்.

அவர் சிரித்தபடியே, ''வேறு எந்த வேலைக்கும் நான் லாயக்கில்லையோ என்னவோ!'' என்றார் ஆஸ்திரேலிய சுயவிமரிசன சுபாவத்தில்.

மாடுகள் நின்ற தொழுவும் மகா சுத்தமாக, வெளிச்சமாக இருந்தது. பால் கறப்பதிலிருந்து டின்களில் ஸீல் செய்வது வரை எல்லாம் மெஷின்கள் செய்கின்றன.

**ஸி**ட்னியில் தனியாக ரயிலில் பயணம் செய்ய விரும்பினேன். தினமும் காலையிலிருந்து மாலை வரை காரில் செல்வதில் ஒரு குறை தோன்றிற்று. சராசரி எளிய மக்களைச் சந்திக்க முடியவில்லை. பேச முடிவதில்லை. அதனால் ஒரு நாளைக்குக் கார் வேண்டாம் என்று சொல்லிவிட்டு 'கடும்பா' என்ற மலைத்தொடர் இருக்கும் இடத்தைக் காண ரயிலில் ஏறிக் கொண்டேன். ரயில் மகா சுத்தமாகப் புத்தம் புதிதாகப் பளபளத்தது. வயதானவர்களுக்கும் உடல் ஊனமுற்றவர்களுக்கும் பிரத்தியேகமாக ஒதுக்கப்பட்ட ஆசனங்கள். ரயில் நிலையத்தில் ஒரு குழப்பமும் இல்லை. யாரையும் எதையும் கேட்க வேண்டியதில்லை. எல்லாம் தெளிவாக ஒரு பெரிய போர்டில் தெரிவித்திருக்கிறார்கள். அப்படியும் புரியாமல் அருகில் நிற்கும் ஆஸ்திரேலியரைக் கேட்டால் முகம் சுளிப்பதில்லை. பொறுமையுடன் பதில்சொல்கிறார்கள். ஒரு ஸ்டேஷனில் ஒரு இளவட்டக் கும்பல் நான் இருந்த பெட்டிக்குள் நுழைந்தது. தலைமுடியைக் கண்டபடி விகாரமாய் வெட்டி, சிவப்பு பச்சை என்று கண்ட வர்ணங்களில் சாயம் பூசி, கண்களில் மையும் காதில் லோலக்கும், வாயில் சூயிங்கமுமாய்ப் பையன்கள்! என்னுடன் பெட்டியில் இருந்த மற்றவர்கள் அவர்களைக் கண்டு கொள்ளவேயில்லை. 'நமக்கேன் வம்பு என்று ஒதுங்குவது போல் இருந்தார்கள். அந்தஇளைஞர்களோ தாங்கள் ஏதோ தனி உலகத்தில் இருக்கிற மாதிரி அட்டகாசமாகப் பேசிச் சிரித்தார்கள். சிலரின் கைகளில் பாம்பும் தேளுமாகப் பச்சைக் குத்தியிருந்தது. அவர்கள் இறங்கியதும் என்னையறியாமல் ஒரு நிம்மதிப் பெருமூச்சு வந்தது!

கடும்பாவை அடைந்ததும் ஒரு சுற்றுலா பஸ்ஸைப் பிடித்துச் சுற்றிப் பார்த்தேன். அற்புதமான இயற்கை எழில் மிகுந்த பகுதி. வழிகாட்டி, ஒவ்வொரு நிறுத்தத்திலும் அவ்விடத்துக்குரிய விசேஷமான பழங்குடிக் கதைகளைச் சொல்லி விளக்கினார். விக்கிரமாதித்தன் கதைகளைப் போல இருந்தன. ஆஸ்திரேலியப் பழங்குடி மக்கள் திராவிடர்கள் என்று சிலர் நினைப்பது உண்மையாக இருக்க வேண்டும் என்று கூடத் தோன்ற ஆரம்பித்து விட்டது! மறுநாள் மியூஸியத்தில் பழங்குடிப் பகுதியைப் பார்வையிட்ட போது அந்த எண்ணம் மேலும் வலுப்பெற்றது. அங்கு விவரிக்கப்பட்டிருந்த சில சடங்குகள் தமிழ்நாட்டுச் சடங்குகளையே ஞாபகப்படுத்தின.

**ஸி**ட்னியை விட்டுக் கிளம்புவதற்கு முன்தினம் ஆஸ்திரேலிய மியூஸியத்தையும் புகழ்பெற்ற மிருகக்காட்சி சாலையையும் பார்த்த அனுபவம் மறக்க முடியாதது. மிகுந்த சிரத்தையுடன் உருவாக்கப்பட்டிருக்கும் மியூஸியம் அரிய பொக்கிஷங்களைக் கொண்டிருப்பதோடு மாணவர்களுக்குச் சிறந்த கல்விக்கூடமாகவும் திகழ்கிறது. கூட்டம் கூட்டமாகப் பள்ளிக் குழந்தைகள் அமர்ந்து தாள்களில் தாங்கள் பார்த்த விஷயங்களைப் பற்றிய கேள்விகளுக்கு விடைகளை எழுதிக் கொண்டிருந்தார்கள்.

மிருகக் காட்சி சாலையில் ஆஸ்திரேலியாவுக்கே பிரத்தியேகமாய் உரிய கங்காருவையும், நூற்றுக்கணக்கான பல நிறம் கொண்ட கிளிகளையும் இதர பல பறவை இனங்களையும் கண்டு நானும் அங்கு வந்திருந்த குழந்தைகளில் ஒருத்தியாகச் சந்தோஷப்பட்டேன்.

மறுநாள் பிற்பகல் நான் சிங்கப்பூருக்குக் கிளம்ப வேண்டியிருந்தது. ஸ்டீவர்ட் வாலஸ் முன்தினம் மாலை எனக்கு டெலிபோன் செய்து, வாழ்த்துக்கள் சொல்லி, ''விமான நிலையத்துக்கு உங்களை அழைத்துப் போக ஒரு மணிக்குக் கார் வரும். சிங்கப்பூரில் விச்ராந்தியாக இருப்பீர்கள்!'' என்றார். ஆனால் சிங்கப்பூரில் கால் வைத்ததும் எனக்கு 'டென்ஷன்' தான் காத்திருந்தது!

(தொடரும்)

''அன்பு'' — குருடர்களும் பார்க்கக் கூடிய செவிடர்களும் கேட்கக் கூடிய ஓர் அற்புதமான மொழி!

— மார்க் ட்வைன் தகவல்: சுந்ததாசன்.

# உங்கள் கைகளிலேயே குணப்படுத்தும் சக்தி...




## சுளுக்கு, தசைபிடிப்பு, மூட்டுநோவு, உடல்வலி இவைகளுக்கு.

பாசமிக்க மென்மையான உங்கள் கைகளின் ஸ்பரிசம், கூடவே குணப் படுத்தும் சக்திமிக்க அயொடெக்ஸ்— உங்கள் குடும்பத்திற்குத் தேவை. எனவே கைவசம் இருக்கட்டும் அயொடெக்ஸ். ஏனெனில், பாதிக்கப் பட்ட திசுக்களைக் குணப்படுத்தும் அயொடின் மற்றும் வலிதணிக்கும் மீத்தைல் ஸலிஸிலேட் கொண்டது அயொடெக்ஸ்.

**அயொடெக்ஸ் இரு முறை தினம் தடவ இரு மடங்கு குணம்**

வலி தணியும் வரை, தினம் இருமுறை அயொடெக்ஸ் தடவ டாக்டர்கள் பரிந்துரைக்கின்றனர்... பின்னரும் இரு தினங்கள்... ஏனெனில் வலி ஒரு அடையாளம் மட்டுமே. நிஜமான பிரச்சினை, திசுக்களின் உள்ளார்ந்த பாதிப்பு.

எனவே, உமது அன்பிற்குரியோர், சுளுக்கு, தசைப்பிடிப்பு, மூட்டுநோவு, உடல்வலி இவற்றால் துன்புறுகையில் அயொடெக்ஸ் தடவித் தேயுங்கள் தினம் இருமுறை. இருமடங்கு வேகமாக அவர்கள் தத்தம் வேலைகளை கவனிக்கத் தொடங்குவர். உங்களை அன்புடன் நினைப்பார்கள்.

**அயொடெக்ஸ்®**- குணப்படுத்தும் சக்திகொண்ட பாம்

SKF - ஓர் எஸ்கேஎஃப் தயாரிப்பு

ELL-1508



## நானும் ஒரு தொழிலாளி

"கமல்: அன்றும் இன்றும்" அல்லது "அம்பிகா: அன்றும் இன்றும்" என்ற தலைப்பில் யாராவது ஆராய்ச்சி செய்ய நினைத்திருக்கிறீர்களா? வாருங்கள் இந்தப் படத்திற்கு. கமலையாவது இப்படி அப்படி சேர்த்துக் கொள்ளலாம். அம்பிகாவின் மூக்கு இந்தக் காட்சியில் செழித்துப் போவதும், அடுத்த காட்சியிலேயே இளைத்துப் போவதும், மகா வேடிக்கை. (ரொம்ப வருஷமாய் எடுத்த படம்.)

கதை என்னவென்று பல்லின் மேல் நாக்கைப் போட்டு யாராவது கேட்டீர்களானால் இதுதான்: அப்பாவை ஒளித்து வைத்துவிட்டு, அவர் விபத்தில் இறந்து விட்டதாய்க் கதை கட்டிவிடும் அவருடைய பார்ட்னர்களைப் பழிவாங்க பணக்கார மகன் கிளம்பி, ஏழைத் தொழிலாளியாய் வேஷம் போட்டு, இன்னொரு பெண் தொழிலாளி குளத்தில் குளித்து ஆடையிழந்து நிற்க, அவளுக்குத் தன் கோட்டைக் கழற்றிக் கொடுத்து, பாடி, டான்ஸ் ஆடி, நினைத்த போது மேலே விழுந்து புரண்டு காதலித்து, ஊடே ஊடே அப்பா பற்றிய மர்மத்தைக் கண்டு பிடிக்க முயற்சி செய்து, விதம் விதமாய்ச் சண்டை போட்டு, மாறு வேஷ டான்ஸ் ஆடி, க்ளைமாக்ஸில் மோட்டார் சைக்கிள், கார் எல்லாவற்றிலும் துரத்தி வில்லன்களை மடக்கி அப்பாவை விடுவித்து... போதுமா?

சண்டைக் காட்சிகளில் கமல் தூள் கிளப்புகிறார். காதல் காட்சிகளில் அம்பிகா ஒட்டிக் கொள்கிறார். பாடல் காட்சிகளில் இளையராஜா உயிர் கொடுக்கிறார்.

காதலியின் அப்பாவுக்குப் பார்வையில்லாமல் போனது கமலுக்கு வசதியாய் இருக்கிறது. வயசானவர் போல் குரலை மாற்றிக் கொண்டு பேச, அந்த அப்பாவி அப்பா, 'அவர் நம்ம வீட்லயே படுத்துக் கட்டும்' என்று சிபாரிசு செய்ய, நல்ல கலகலப்பு.

என்னதான் தொழிலாளி உசத்தி என்றாலும், கொடுத்த லஞ்ச் நேரத்திற்கு அப்புறமும் அவர் சாப்பிடுவதைத் தட்டிக் கேட்கக் கூடாது என்பது எந்த விதத்தில் நியாயம்?

ராஜீவ், சாதனா ஜோடி பெரிசாய் ஒன்றும் சாதிக்காவிட்டாலும், கதையின் ஓட்டத்திற்கு அவ்வப்போது இட்டு நிரப்புகிறார்கள்.

கமல், அம்பிகா, ஸ்டண்ட், பாடல்கள் — படத்தின் வெற்றிக்கு இவை போதும் என்று டைரக்டர் நினைக்கலாம். மக்கள்?



யாரோ எழுதிய கவிதை

# இரண்டு படங்கள்

நடக்கிறார்கள். கை கோத்துக் கொள்கிறார்கள். நடக்கிறார்கள். எப்பொழுதாவது காரில் ஏறி மலை முகட்டிற்குப் போய்...

மறுபடியும் நடக்கிறார்கள். வித்தியாசத்திற்கு ஒன்றிரண்டு தடவை படகில் பவனி வந்து ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டே இருக்கிறார்கள். படத்தின் முக்கால் நீளத்திற்கு சிவகுமாரும், ஜெயஸ்ரீயும் இதையே செய்து கொண்டிருப்பதைப் பார்த்தால், காமிராமேன் அசோக் குமாருக்கு மட்டும் வேலை வைத்தால் போதும் என்று ஸ்ரீதர் முடிவு செய்துவிட்டது போல் இருக்கிறது.

ஓவியம் வரையப் போன இடத்தில் அருவியின் காலடியில் ஒரு பெண் மயங்கிக் கிடப்பதைக் கண்டெடுக்கும் டாக்டர், அவளுக்குத் தன் க்ளினிக்கிலேயே சிகிச்சை அளித்து எழுப்பி: ''யாரம்மா நீ?''

''தெரியலையே, டாக்டர். என் பழைய நினைவுகள் எல்லாம் மறந்து போச்சு'' என்று அந்தப் பெண் சொல்ல, கதையில் எத்தனை ஸ்கோப் இருக்கிறது! அதுவும் அவள் ஏற்கெனவே திருமணமானவள் என்பது தெரியாமல், டாக்டரும் அவளும் காதல் எனும் மாய வலையில் சிக்கும் போது?

ஊஹூம், ஸ்ரீதர் அலட்டிக் கொள்ளவே இல்லை. சிவகுமாருக்கு மட்டும் என்ன வந்தது? அவரும் மறுபடி மறுபடி முகத்தை க்ளோஸ் அப்பில் காட்டிச் சிரித்துக் கொண்டிருப்பதோடு சரி. ராஜேஷ் ஜஸ்ட் ஓ.கே.

குன்னூரிலிருந்து சென்னைக்குக் காரில் வருகிறார்களாம். இந்தக் காட்சியை எவ்வளவு சின்ஸியராக மலைப்பாதையில் வளைந்து வளைந்து கார் இறங்க இறங்க, கடைசி வளைவு வரை காமிரா துரத்திக் கொண்டே வருகிறது! படத்தின் நீளத்தைக் கூட்ட வேறு காட்சிகளே கிடைக்கவில்லையா?

தேங்காய் ஸ்ரீனிவாசன், கோவை சரளா, சார்லி — இந்த காம்பினேஷன் வரும்போது மட்டும் ஆறுதல். பழைய நினைவுகளைக் கிளறுகிறேன் என்று கேள்வி மேல் கேள்வியாய்க் கேட்டு ஜெயஸ்ரீயைக் குடைய, அவர் பாட்டுக்கு வாய்க்கு வந்ததைச் சொல்லி டபாய்க்க, ''ஏன்யா, இந்த பொண்ணு சொல்றதெல்லாம் பார்த்தா இந்த ஜன்மத்து ஞாபகம் மாதிரியாவா இருக்கு? பூர்வ ஜன்மம் பத்தி சொல்லுதுய்யா...''

மெதுவாய் நகர்த்துவது என்று டைரக்டரே தீர்மானம் போட்ட பிறகு இசையமைப்பாளர் ஆனந்த்சங்கர் அதைக் கெடுப்பாரா? நிதானமான ட்யூன்கள். ஆனால் இனிமையான இசை.

ஊட்டி மலர்க்காட்சி. அம்னீஷியா மனைவி, தன் கணவனையே அடையாளம் தெரியாமல் நிற்க, ''என்னை மறந்திட்டீங்களா?'' என்று ராஜேஷ் துக்கம் சொட்டும் குரலில் கேட்கிறார். ''ஆமாம்.. நான் வரேங்க'' என்று ஜெயஸ்ரீ சர்வசாதாரணமாய்ச் சொல்லிவிட்டு நகர்கிறார். இந்தக் காட்சியில் மட்டும் ஸ்ரீதர் கவிதை படைக்கிறார். மற்றதெல்லாம் யாரோ எழுதிய கவிதை!

— ஜெயமன்மதன்

DAVANGERE



புடவைகள், சூட்டிங்ஸ், ஷர்ட்டிங்ஸ்,
டிரெஸ் மெட்டீரியல்ஸ்

**தாவண்கெரே**

தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிட்., ஹனுமந்தப்பா பில்டிங்ஸ், சித்ரதுர்கா ரோடு, தாவண்கெரே 577 002.

ஷோரூம்கள்:

காவேரி பவன், பெங்களூர் 560 009, காந்திபஜார்பேட், ஹூப்ளி 580 020 சித்ர துர்கா ரோடு, தாவண்கெரே 577 002.

T-2-TAM

# விஷயம் தெரியாதா உங்களுக்கு?

* வீரமுத்துவின் பாதிக்கப்பட்ட "இரால் பண்ணை"க்கு அரசு நியாயமான தொகை அளிக்க வேண்டும் என்கிறீர்களே? நியாயத்திற்கும், தமிழக அரசுக்கும் துளிக்கூடத் தொடர்பில்லை என்ற விஷயம் கூடத் தெரியாதா உங்களுக்கு?

அரிமளம் (புதுவை)
பா. கிருஷ்ணதாஸ்.

* அமைச்சர் பதவி வகித்த பொழுது ஊழல்களைக் கண்டும் காணாதது போல் இருந்துவிட்டு, பதவி பறி போன பின்பு முதல்வர் மீதும் மற்றவர்கள் மீதும் ஊழல் குற்றச்சாட்டுக்களை அடுக்கடுக்காகக் கூறுவது எஸ்.டி.எஸ். போன்ற அரசியல்வாதிகள் அனைவருக்குமே வழக்கமாகிவிட்டது.

திருச்சி, வி.கே. துரைசாமி அய்யர்

* இலந்துறை மட்டுமல்ல — எங்கள் ஊருக்கு அருகில் உள்ள முத்தூர், வண்ணக்குடி, பவுண்டரீகபுரம், மாசினக்குடி... போன்ற ஊர்களுக்கும் பஸ் வசதி அறவே கிடையாது! அட அவ்வளவு ஏன் சார் போறீங்க... சரியான ரோடு வசதியே கிடையாதுங்க!

திருவிடைமருதூர்,
இடவை ராஜன்.

* தென்னிந்தியாவின் நெற்களஞ்சியத்தைப்(!) பற்றிக் கிழிகிழி என்று கிழித்து, முதல்வர் முதல் எம். எல். ஏ. வரை தானாகவே ஒரு குட்டு குட்டிக் கொள்ளும்படி வைத்த உமக்கு ஒரு குட்டு... சாரி... ஷொட்டு...!

குத்தாலம் (தஞ்சை) எஸ். ராஜா.

* இரவீந்திரநாத தாகூரின் நூற்று இருபத்தைந்தாவது பிறந்த நாளில் கல்கியின் தாரக பதில்கள் பகுதியில் வெளியான அத் தேசியக் கவிஞரின் கவிதை வரிகள் கேள்விக்குப் பொருத்தமான பதிலாக இருந்ததோடு கவிஞரின் நினைவுக்கு அஞ்சலியாகவும் அமைந்து விட்டன.

திருச்சி — 5. எம். காமராஜ்.

* மாவட்டச் செய்திகளை வெளியிடும்போது மாவட்டத்தின் வரைபடத்தோடு அதன் சிறப்புக்கள், புகழ்பெற்ற தலங்கள், தொழில்கள் மற்றும் அம்மாவட்டத்தி லுதித்த பெரியவர்கள் பற்றிய விவரங்கள் போன்றவற்றை இரண்டு பக்கங்களில் வெளியிட்டு, அப்படிப்பட்ட மாவட்டம் இன்று இத்தகைய குறைபாடுகளின் விளைவால் எவ்வளவு அவல நிலையில் இருக்கிறது என்பதை குளோசப் காட்சியாக வாசகர்களுக்கு உணர்த்தினால் என்ன?

து. நா. பாளையம்,
ராஜவேல்மைந்தன்.

* கடந்த 27.4.86 இதழ் பெரியார் மாவட்டச் சிறப்பிதழில் ஈரோடு காரை வாய்க்கால் மைதானத்தில் அமைந்துள்ள "கூரை தகர்ந்த சத்துணவுக் கூடம்" புகைப்படம் வெளிவந்ததை யடுத்து, நிர்வாகம் உடனடி நடவடிக்கை எடுத்து, கூரைத் தகடு அமைக்கப்பட்டு விட்டது. நன்றி! 'கல்கி'யின் பணி பாராட்டுக்குரியது.

ஈரோடு — 1, என். பூபதிராஜா.

* கல்கி 16.3.86 இதழில் ஆண்டிப்பட்டிக்கு ஒரு விசிட் என்ற கட்டுரையில் என்னுடைய நிர்வாகத்திலிருக்கும் ஆலயத்தைப் பற்றியும், ஆலய நிலங்கள் பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ள விவரங்கள் தவறானவை.

ஆண்டிப்பட்டி அருள்மிகு காளி அம்மன் ஆலயத்துக்குப் புஞ்சை நிலம் மொத்தம் ஏக்கர் 2.90 சென்டு மட்டும்தான் உள்ளது. நீங்கள் குறிப்பிட்டுள்ளது போல் 10 ஏக்கர் அல்ல.

பாப்பம்மாள்புரத்தில் பள்ளி நடத்த சுமார் 2 ஏக்கர் நிலத்தைக் கேட்டதாகவும், நிர்வாகத்தினர் மறுத்து விட்டதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. திரு. வேலுச்சாமி என்னிடம் பள்ளிக்கூடம் நடத்த ஆலய இடம் வேண்டும் என எழுத்து மூலம் மற்றும் வாய் மூலமும், கேட்கவில்லை. நான் மறுப்பு தெரிவிக்கவுமில்லை. தவிர எழுத்து மூலம் விண்ணப்பித்தாலும் இனாமாகத் தரச் சட்டம் இடம் தரவில்லை. ஆலய நிர்வாகிகளாகிய நாங்கள் குத்தகை நிர்ணயித்து, குத்தகைக்கு விடும்படி அறநிலையத் துறைக்கு விண்ணப்பிக்க முடியுமே தவிர அனுமதி வழங்க வேண்டியது அறநிலையத்துறைதான். கிரயம் செய்யவும் விதிமுறைகள் உள்ளன.

ஆலய நிலம் ஏதும் தற்போது காலியாக இல்லை. அடிமனைகள் உத்தரவு பெற்று வாடகைக்கு விடப்பட்டுள்ளன. அவற்றில் பக்கா கட்டிடம் ஒன்றுமில்லை. தற்காலிக ஷெட்கள் மட்டுமே உள்ளன. அவற்றை எப்போது வேண்டுமானாலும் அப்புறப்படுத்தலாம்.

ஆண்டிப்பட்டி, வி. கிருஷ்ணசாமி.
பரம்பரை அறங்காவலர்,
அருள்மிகு காளி அம்மன் ஆலயம்.




இயது கட்சி 1977 ல் பதவிக்கு வந்த போது, தொழில் துறையில் தமிழ்நாடு முன்னேற என்னென்ன செய்யலாம் என்று விவாதிப்பதற்காகப் பெரிய தொழிலதிபர்களை, தம்மைச் சந்திக்கும்படி கேட்டுக்கொண்டார் முதலமைச்சர் எம். ஜி. ஆர். என்னைக் கேட்ட போது, ஒரு நியூஸ்பிரிண்ட் காகித ஆலையைத் துவக்கலாம் என்று சொன்னேன்!'' என்று ஆரம்பித்தார் சேஷசாயி பேப்பர் மில் அதிபர் திரு எஸ். விசுவநாதன்.

''தமிழ்நாட்டில் வனவளம் மிகக் குறைவு. அதனால், தாராளமாகக் கிடைக்கும் கரும்புச் சக்கையை ஆதாரமாகக் கொண்டு நியூஸ் பிரிண்ட் காகிதத் தொழிற்சாலை துவங்கலாம் என்றேன். உலகில் மூன்றே இடங்களில் தான் கரும்புச் சக்கையிலிருந்து செய்தித்தாள் காகிதம் தயாரிக்கும் முயற்சிகளில் ஈடுபட்ட ஆலைகள் இருந்தன. ஒன்று மெக்ஸிகோ; இன்னொன்று பெரு; மூன்றாவது அர்ஜென்டீனா. அவர்களும் முழுக்க முழுக்க கரும்புச் சக்கை பயன்படுத்தவில்லை. 60% கரும்புச் சக்கையும் 40% இதர கூழும் கலந்து தான் தயாரித்தனர். ஆனால் இப்போது தமிழ்நாடு நியூஸ் பிரிண்ட் காகித ஆலை நூறு சதம் கரும்புச் சக்கை பயன்படுத்தி பத்திரிகைக் காகிதம் தயாரிக்கிறது.

# இது இந்தியர் சாதனை: ...



இம்மாதம் 24 ஆ...
நாடு நியூஸ்பிரிண்ட் ...
நாட்டுக்கு அர்ப்பண...
முதல்வர்......



இதுதான் இன்றைய சாதனை. மெக்ஸிகோவி லுள்ள ஒரு காகித ஆலையைப் பார்வையிட்ட எம். ஜி. ஆர்., இந்தத் துறையில் தேர்ச்சி கண்ட டாக்டர் கூலி என்பவரையும் சந்தித்துப் பேசினார். பிறகு என்னைப் பார்த்து, "உங்களால் செய்ய முடியும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது!" என்றார்.


• ஜி. ரங்கமன்னர்.

"தமிழ்நாடு அரசாங்கத்தின் உதவியில்லாமல் இது நடந்தே இருக்க முடியாது. மத்திய அரசும் ஒத்துழைப்பு தந்தது. அப்போது திரு. ஆர். வெங்கட்ராமன் அவர்கள் தான் மத்திய நிதி மந்திரி. தொழில் துறையில் புதிய சிந்தனைகளையும் சாதனைகளையும் எப்போதுமே ஊக்குவிப்பார் அவர். இந்தத் தொழிற்சாலை வருடத்துக்கு அறுபது கோடி ரூபாய் அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தும்.


• ஏ. என். வெங்கட்ராமன்.

"இதன் ஆரம்பத்தில், திட்டமிடப்பட்ட முதலீடு நூறு கோடி ரூபாய் இந்தியப் பணமாகவும், நூறு மிலியன் டாலர் அந்நியப் பணமாகவும் — ஆக மொத்தம் அன்றைய மதிப்பில் சுமார் 180 கோடி ரூபாய். நூறு

# இரு தமிழர் சாதனை!

தேதி, தமிழ்
கித ஆலையை
க்கினர் தமிழக





தே ஆலையின் சில தோற்றங்கள்.

மிலியன் டாலர்களுக்காக, அமெரிக்காவி லுள்ள தனிப்பட்ட நிதியுதவி நிறுவனங் களுடன் பேச்சு வார்த்தைகள் தொடங்கி னேன். உலக வங்கிக்கு இந்த விஷயம் எட்டி யது. எங்களிடம் வந்தார்கள். திட்டத்தைப் பற்றி விவாதித்தார்கள். திருப்தி அடைந்து, பாராட்டினார்கள். திட்டத்தைத் தயார் செய்து அனுப்பிய பதினோராவது மாதம், உலக வங்கி பணத்தைக் கொடுத்தது.''

**''ஒரு ஆண்டுக்கு எத்தனை டன் காகிதம் தயாரிக்க முடியும்?''**

''50,000 டன் நியூஸ்பிரின்ட்டும், 40,000 டன் வெள்ளைத்தாளும். இந்தத் தொழிற் சாலையின் வடிவமைப்பு எப்படி இருக்கிறது என்றால், பத்திரிகைக் காகிதம் தயாரிக்க நாங்கள் செய்த ஆய்வுகள் ஒருவேளை தோல்வி அடைந்திருந்தாலும், இந்தத்திட்டம் தோற்றுப் போயிருக்காது. மற்றவிதமான அச்சிடுகிற, எழுதுகிற காகிதத்தைக் கரும்புச்சக்கையிலிருந்துதயாரித்துக்கொண் டிருக்கலாம்.''

**''முப்பது வருடங்களாக, வெளிநாடு களில் தோல்விகண்ட முயற்சிகளைப் பார்த்த பிறகும், இதில் ஈடுபட உங்களுக்கு எப்படித் தோன்றியது?''**

''தேவை ஏற்படும் போது புதிய கண்டு பிடிப்புகள் உருவாகின்றன. இந்தியாவில் பத்திரிகைக் காகிதம் பற்றாக்குறை. அயல் நாட்டிலிருந்து தருவித்தால் அந்நியச் செலா வணி நஷ்டம். எனவே இதற்குத் தீர்வு கண்டாக வேண்டும். வன வளம் குறைவாக இருக்கும் போது இதர மூலப் பொருள்களைப் பயன்படுத்த முடியுமா என்று பார்க்க வேண்டும். நாங்கள் உலகெங்கும் காகித உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டிருந்த தயா ரிப்பாளர்களின் உதவியை நாடினோம். அப் போதுதான் அமெரிக்காவிலுள்ள பெலாய்ட் கார்ப்பரேஷன் இதற்கான ஆராய்ச்சி வசதிகளைச் செய்து தர முன் வந்தது. இரண்டரை வருட கால ஆராய்ச்சி யில் நமது விஞ்ஞானிகள் ஈடுபட்டு வெற்றி கண்டார்கள். வெற்றி கண்ட பிறகு, இந்தத் திட்டத்தைச் செயலாக்க, தமிழக அரசின் 'தமிழ்நாடு நியூஸ்பிரின்ட் அண்ட் பேப்பர் லிமிடெட்' தொழிற்சாலை அமைந்தது.

''தமிழ்நாடு பேப்பர் மில்லுக்குத் தேவை யான கரும்புச்சக்கையை, அதன் அருகே உள்ள ஆறு கரும்பு ஆலைகள் கொடுக்கின் றன. இதற்குப் பதிலாக, அவர்களுக்கு எரி சக்தியை (உஷ்ணமான நீராவி) அளிக்கிறது காகித ஆலை. நம் நாட்டில் தாராளமாகக் கிடைக்கும் கரும்புச் சக்கையிலிருந்து நியூஸ் பிரின்ட் காகிதம் தயாரிக்க முடியும் என்ற சாதனையைச் செய்திருப்பவர் இந்தியர்— அதிலும் தமிழர் என்னும் போது பெருமை யாக இல்லையா?'' என்று திரு விசுவநாதன் சொன்னதும், "அவர்கள் யார்"என்று கேட் டோம்.

''திரு. டி. எஸ். வெங்கட்ராமன் என்பவ ரும் அவருக்கு உதவியாக திரு. ஜி. ரங்க 'மன்னாரும்!''

**தொ**லைபேசியில் தொடர்பு கொண்ட ஒரு மணி நேரத்துக்குள், திரு. வெங்கட் ராமன் அவர்களின் குரல் மறு முனையிலிருந்து கேட்டது:

''வாருங்கள் பேசுவோம்!'' என்றார்.

**''இது எப்படி சாத்தியமாயிற்று மிஸ்டர் வெங்கட்ராமன்?''**

''கமர்ஷியல்டெக்னாலஜிஎன்றுசொல்லப் படும், வியாபார சாத்தியமான தொழில் நுட்பத் திறனை உலகெங்கும் இரண்டு மாதங்கள் இடைவிடாமல் தேடினோம். பல் வேறு நாடுகளுக்கு 37 விமானப் பயணங்கள் செய்தோம். என்னைத் தவிர, திரு. என். கோபால்ரத்தினம், திரு அருண், திரு முரளி ஆகியவர்களுக்கும் இந்தப் பயண முயற்சி யில் பங்கு உண்டு.

''எங்களுடைய தேடலில் கிடைத்ததுதான் பெலாய்ட் கார்ப்பரேஷன். இந்த பெலாய்ட் கார்ப்பரேஷன், காகிதம் தயாரிக்கும் இயந்தி ரங்களை உற்பத்தி செய்வதில் உலகிலேயே முன்னோடி நிறுவனம். இவர்களுக்குத் தீவிரமான எதிர்கால நோக்கும் இருந்தது. நூறு சதவிகிதம் கரும்புச் சக்கையிலிருந்து செய்தித்தாள் காகிதம் தயாரிக்கும் தொழில் நுட்பத்தைக் கண்டுபிடித்துவிட வேண்டும் என்ற ஆர்வம் அவர்களுக்கும் இருந்தது. எனவே இந்த ஒப்பந்தத்துக்குச் சம்மதித் தனர். இதுபோன்ற புதிய கண்டுபிடிப்புகள் மட்டுமே இனி வருங்காலத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் என்று உணர்ந்து செயல் பட்டனர்.

''பெலாய்ட் கார்ப்பரேஷனுடன் 1981ல் ஒப்பந்தம் செய்வதற்கு முன்னேயே லட்சக் கணக்கான ரூபாய் அவர்கள் இந்த ஆராய்ச் சிக்காகச் செலவழித்திருந்தார்கள். ஆனால் 81ல், ஆராய்ச்சியில் முன்னேற்றத்துக்கான

**"மன்னர் இப்பொழுதெல்லாம் மாறு வேடத்தில் நகர் சோதனை செய்யப் போவதில்லையாமே! ஏன்?"**

**"விஷயம் தெரியாதா! மன்னர் மாறு வேடத்தில் வெளியே சென்றதும் கள் வன் ஒருவன் மன்னன் மாதிரியேவேடம் தரித்துப் பொக்கிஷத்திலிருந்ததையெல் லாம் திருடிக் கொண்டு சென்று விட்டா னாம்!"**

ரம்யா.



நாசிலிர்க்கும் ஆரஞ்சுச் சுவை கொண்ட, உடனடி சக்தி தரும் தனிச்சிறந்த பானம் !

விட்டமின்-ஸி செறிந்தது




விலைமிக்க சர்க்கரை சேர்க்கத் தேவையில்லை



புதிய க்ளுகோன்-ஸி, க்ளுகோஸ் அடங்கியது. உங்கள் குழந்தை சுறுசுறுப்புடன் துள்ளிவிளையாட, விரைந்து சக்திதரும் வசதியான உணவு.

மேலும், விட்டமின்-ஸி செறிந்தது. விட்டமின்-ஸி குழந்தைகளின் பற்கள், எலும்புகள், திசுக்கள் இவை வளர உதவுகிறது.

நான்கு தேக்கரண்டி க்ளுகோன்-ஸி எடுத்து, ஒரு டம்ப்ளர் ஐஸ் தண்ணீரில் இட்டுக் கரைக்கவும். புத்துணர்ச்சியூட்டும் பானம் தயார்—நாசிலிர்க்கும் ஆரஞ்சுச் சுவையுடன்; தினம் இருமுறை உங்கள் குழந்தைக்கு இதைக் கொடுங்கள்.

# க்ளுகோன்-ஸி

GLL-1174 R

அறிகுறிகள் எதுவும் தென்படவில்லை. 82ல் சேஷசாயி நிறுவனத்திலிருந்து நான் அங்கே போன போது, பெலாய்ட் கார்ப்பரேஷனின் ஆராய்ச்சியின் முன்னேற்றம் சரியான திசையில் அமையவில்லை எனக் கண்டேன். அந்தத் திசையை மாற்றும் பணியில் நான் முதலில் இறங்கிய போது ஏகப்பட்ட தடங்கல்கள், அல்லல்கள். காரணம், என் யோசனைகள் பெலாய்ட் கார்ப்பரேஷனுக்கு இன்னும் பல லட்சக்கணக்கில் செலவு ஏற்படுத்தி வைத்ததுதான்!

''ஆராய்ச்சி சம்பந்தமான அபிப்பிராயங்களைப் பகிர்ந்து கொள்ளவோ, ஒரு சந்தேகம் எழும் பட்சத்தில் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளவோ, மூத்த விஞ்ஞானிகள் யாரும் ஒத்துழைப்புக்கு இல்லாமல், எனக்கு உதவிக்காக வந்திருந்த திரு ரங்கமன்னாரும் நானும் மட்டுமே இந்த ஆராய்ச்சிப் பணியை மேற்கொண்டோம். ரங்கமன்னார் முயற்சிகளில் தம்மைமுழுதும்ஈடுபடுத்திக்கொண்டு உழைப்பவர். அவர் எடுக்கும் முடிவுகளில் பிசகு காண முடியாது. அவ்வப்போது எங்கள் அதிபர் திரு எஸ்.வி. அவர்களுடன் டெலிபோனில் தொடர்பு கொண்டு ஆராய்ச்சியின் முன்னேற்றம் பற்றித் தகவல் தந்து கொண்டிருந்தோம். 1983 மத்தியில், டாக்டர் தோர்ஸா என்ற விஞ்ஞானி, பெலாய்ட் கார்ப்பரேஷனின் ஆராய்ச்சிப் பிரிவுக்குத் தலைவராகச் சேர்ந்தார்; பிறகு எங்கள் ஆராய்ச்சிக்கு எவ்விதத் தடையும் இருக்கவில்லை. அவர் ஒத்துழைப்பும் ஆதரவும் மகத்தானவை.''

**''உங்கள் ஆராய்ச்சியைப் படிப்படியாகக் கூற முடியுமா?''**

''கரும்பு, மர வகையைச் சேர்ந்ததல்ல. புல் வகையைச் சேர்ந்த தாவரம். நீள நார் கொண்ட மரக்கூழிலிருந்து காகிதம் தயாரிக்க முடிந்த மாதிரி, சிறுசிறு நார் உடைய கரும்புச் சக்கை மட்டுமே பயன்படுத்தி செய்தித்தாள் காகிதம் தயாரிக்க முடிந்ததுதான் இந்த ஆராய்ச்சியின் வெற்றி. செய்தித்தாளில் முதல் பக்கம் படிக்கும் போது, அதன் பின்புறத்தில் அச்சாகியிருப்பது தெரியக் கூடாது. இதை ஒபேஸிடி என்கிறார்கள். மேலும் அச்சு இயந்திரத்தில் ஒரு நிமிடத்திற்கு 750 மீட்டர் வேகம் ஓடுகிற அளவுக்குக் காகிதத்தின் திடம் இருக்க வேண்டும். அன்று வரை, கரும்புச் சக்கை பயன்படுத்தும்போது இவை இரண்டுமே சாத்தியமாகவில்லை.'

''ஏப்ரல் 83ல், ஆராய்ச்சியின் முழுப் பொறுப்பையும், நானும் ரங்கமன்னாரும் ஏற்றுக் கொண்டோம். செப்டம்பர் 83ல் கரும்புச்சக்கையின் பல்வேறு உட்பகுதிகளின் தன்மைகளைக் கருத்தில் கொண்டு, திருத்தப்பட்ட திட்டம் (**Flow Sheet**) ஒன்று தயாரித்தோம்.

''சனி, ஞாயிறுகளில், நியூயார்க்கிலிருந்து ஐந்து மணிநேரக் கார் பயண தூரத்தில் உள்ள சைரக்யூஸில் இயந்திர அரவைக் கூழ் ஆராய்ச்சியில் காலை முதல் இரவு வரை ஈடுபட்டிருப்போம். சந்தனத்தை அரைப்பது மாதிரி கூழாக அரைத்துச் சுத்தமாக்கும் பெஞ்ச் ஸ்கேல் ரிஃபைனர் அங்கேதான் இருந்தது...

''1983 ஏப்ரல் 18 அன்று ஆரம்பித்த இந்தத் தீவிர ஆராய்ச்சி, சரியாக ஒரு வருடம் கழித்து, 1984 ஏப்ரல் 19 அன்று பலன் அளித்தது. கனடாவிலுள்ள வான்குவர் என்ற நகரில், இந்தக் காகிதத்தில் அச்சடித்துப் பார்க்கும் சோதனைகள் நடைபெற்றன. பல்வேறு நாட்டுக் காகிதத் துறை நிபுணர்கள், உலகவங்கி அதிகாரிகள் எல்லாரும் பாராட்டினர்.''

**''சாதனைக்கு முன்னால் சோதனைகள் இருந்திருக்குமே?''**

''இந்த ஆராய்ச்சி முடிகிற வரையில் எண்ணற்ற கஷ்டங்கள். சில தியாகங்களும் உண்டு! குடும்பத்தை விட்டுப் பிரிந்து தனியே இருக்க நேர்ந்தது. தனியே சமைத்துச் சாப்பிட்டு, அலுவலகம் போய், ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டு, வெற்றி கிடைக்காமல் நாட்கணக்கில் தோல்வியில் சோர்ந்து, அவற்றை எதிர்த்துப் போராடி வெற்றியை அடைவதற்குள் எத்தனை எத்தனையோ அனுபவங்கள்!

''இந்தச் சாதனையைக் கண்டு மெச்சிய பெலாய்ட் கார்ப்பரேஷன், எங்கள் இரண்டு

தமிழ்நாடு நியூஸ்பிரிண்ட் காகிதத் தொழிற்சாலையைப் பார்க்க திருச்சி மாவட்டம் புகளூர் போன போது, சுமார் 750 ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்த ஆலையைச் சுற்றிக் காட்டி, ஒவ்வொரு பகுதியிலும் நடைபெறும் பணிகளை விவரித்தார் விஞ்ஞானி திரு ரங்கமன்னார்.

* மலை மாதிரி குவிக்கப்பட்டிருக்கும் கரும்புச் சக்கைதான். மூன்று ஷிஃப்டுகள் இடைவிடாது இயங்கும் ராட்சத இயந்திரங்கள். நியூஸ்பிரிண்ட் தான் பிரும்மாண்டமாகத் தயாராகி வெளிவந்து, அளவான உருளைகளாக வெட்டப்பட்டு, 'பாக்' செய்யப்படுவது வரை, எங்கெல்லாம் இந்திய இயந்திரங்களைப் பயன்படுத்த முடியுமோ, அங்கெல்லாம் உபயோகித்திருக்கிறார்கள். முக்கியமான சில இயந்திரங்கள் மட்டுமே பெலாய்ட் கார்ப்பரேஷன் தயாரிப்பு.

* தொழிற்சாலையைச் சேர்ந்த ஆராய்ச்சிக் கூடம் மிக நவீனமானது. லேடெஸ்ட் கருவிகளும் ஏராளம்.

* ''இங்கே பணியாற்றுபவர்களின் திறமையும் ஒத்துழைப்பும் பிரமாதமானவை!'' என்கிறார் திரு ரங்கமன்னார்.

* ஆலையை ஒட்டியே குடியிருப்புக்கான காலனி, பஸ் ஸ்டாண்ட், எல்லாம். காலனி முதல் தரம்.

பேரையும், மேலும் இரண்டு வருடங்கள் அவர்களுக்கு ஒத்துழைக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறது. தமிழ்நாட்டில் இந்த ஆராய்ச்சியை வியாபார ரீதியில் செயல் படுத்துவதற்காக நாங்கள் இருவரும் 1985 ஜனவரி மாதம் இங்கு வந்து சேர்ந்தோம். அதே சமயம் கரும்புச் சக்கையும் ஆலைக்கு வேண்டிய அளவு வந்து சேர்ந்தது. அதிலிருந்து பல கட்டங்கள் தாண்டி, 1985 அக்டோபர் 29 ஆம் தேதி, நூறு சதவிகிதக் கரும்புச் சக்கையிலிருந்து செய்தித் தாள் காகிதம் இங்கே தயாரித்து வெளிக் கொண்டு வந்தோம். அதை மறுநாளே 'ஹிந்து' பத்திரிகை அச்சிட்டு, தரத்தைப் பாராட்டியது. இந்தப் பெரும் சாதனையை உலகக் கருத்தரங்கு ஒன்றில், 1985 நவம்பர் நான்காம் தேதி அமெரிக்காவில், மகிழ்ச்சியோடு அறிவித்தோம்.''

''பரம ரகசியம்'' என்ற தலைப்புடன், இந்தக் கண்டுபிடிப்புக்கான கட்டுரைகள், வரைபடங்கள், ஆராய்ச்சிக் குறிப்புகள் கொண்ட 400 பக்க, பெலாய்ட் கார்ப்பரேஷன் தொகுப்பைப் பார்த்தபோது தலை சுற்றியது. ஆனால் ஆசிரியர்கள்: டி. எஸ். வெங்கட்ராமன்; ஜி. ரங்கமன்னார் என்று கொட்டை எழுத்துக்களில் பார்த்த போது மிகப் பெருமையாக இருந்தது!

''எங்களுடைய இந்தச் சாதனைக்கு திரு. எஸ்.வி. அவர்கள்தான் மூல காரணம். ஒரு தொழிலதிபர் லட்சாதிபதியாக வேண்டும் என்றுதான் நினைப்பாரே தவிர, லட்சியவாதியாக இருக்க நினைக்க மாட்டார். ஆனால் தொழிலதிபர் திரு. எஸ். விஸ்வநாதன் இதற்கு விதி விலக்கு!'' என்றார் திரு. வெங்கட்ராமன்.

அமெரிக்கா புறப்படு முன், காஞ்சிப் பெரியவர் ஜெயேந்திரசரசுவதிசுவாமிகளைச் சந்தித்து, ஆசி வழங்க வேண்டிக் கொண்டாராம் விஞ்ஞானி திரு. வெங்கட்ராமன்.

''ஓகோ, அமெரிக்கா போய் மேற்கொண்டு கற்றுக் கொண்டு வரப் போகிறாயோ?'' என்று கேட்டாராம் சுவாமிகள்.

ஒரு நொடி தயங்கிவிட்டு, பணிவுடன் சொன்னாராம் வெங்கட்ராமன்:

''பாதி கற்றுக் கொள்ள;
பாதி கற்றுக் கொடுக்க!''

பேட்டி, கட்டுரை: **சாருகேசி.**

---

## காவிரி ஆற்றில் காகித ஆலைக் கழிவு நீர் கலக்கிறதா?

சேஷசாயிகாகிதஆலைஅதிகாரி
திரு.எஸ். ஜி. ரங்கன் மறுக்கிறார்!



சுத்தப்படுத்திய கழிவுநீர் விவசாயத்துக்குப் பயன்படுகிறது. பத்தாண்டுகளுக்கு முன்னர் சில விவசாயிகள் தாங்களாகவே கழிவுநீரை விவசாயத்துக்குப் பயன்படுத்த ஆரம்பித்தனர். நெல்லும் கரும்பும் நல்ல மகசூல் கண்டது. அதைப் பார்த்துவிட்டு நூற்றுக்கணக்கான விவசாயிகள் ஒடப்பூள்ளி—பாப்பம்பாளையம் நீர் ஏற்றுப் பாசனக் கூட்டுறவுக் குழு அமைத்து காகித ஆலையின் உதவியுடன் சுத்தப்படுத்திய கழிவு நீரைப் பயன்படுத்தி வருகின்றனர். 80 லட்சம் ரூபாய் செலவில் அமைந்த கழிவுநீர் சுத்திகரிப்பு நிலையம் இயங்க ஒரு நாள் செலவு 7000 ரூபாய்! கழிவுநீர்ப் பாசனம் வந்த பிறகு நிலத்தின் மதிப்பு ஏக்கர் ரூ. 20,000 லிருந்து, ரூ. 50,000 ஆக உயர்ந்து விட்டது!

சேஷசாயி காகித ஆலையும் பொன்னி சர்க்கரை ஆலையும் சேர்ந்து ஏராளச் செலவில் பூமிக்கடியில் குழாய்கள் பதித்தும் பம்ப் ஹவுஸ்கள் அமைத்தும் சுத்தப்படுத்திய கழிவு நீரைப் பாய்ச்சி சுமார் 1500 ஏக்கர் வரை தரிசு நிலத்தை சாகுபடிக்குக் கொண்டு வர மேற்கொண்ட முயற்சி பாதி நிறைவேறி விட்டது.

ரசாயன ரீதியில் சுத்தப்படுத்தி இப்போது காவிரியில் கலக்கும் சிறிதளவு கழிவுநீர் கூட இன்னும் சில மாதங்களுக்குப் பிறகு கலக்காது.

சுற்றுப்புற கிராமங்களில் மக்களுக்குச் சுத்தப்படுத்தப்பட்ட குடிநீர் வழங்கும் திட்டமும் அமுல்படுத்தியுள்ளோம்.

மொத்தத்தில் ஐந்து பலன்கள்: 1. மாசுக் கட்டுப்பாடு. 2. தரிசு நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டு வரப்படுதல். 3. பொன்னி சர்க்கரை ஆலைக்குக் கரும்பு கிடைக்கிறது. 4. அதனால் காகித உற்பத்திக்குக் கரும்புச் சக்கை கிடைக்கிறது. 5. கரும்புச் சக்கை கிடைப்பதால் காகிதத்துக்காக மரங்கள் வெட்டப்படுவது கணிசமாகக் குறைகிறது.

சாயத் தொழில், தோல் பதனிடும் தொழில் இவற்றால் வெளிப்படும் கலங்கல் நீர்தான் காவிரியில் கலக்கிறது. இந்தப் பழியைக் காகித ஆலை மீது போட்டுச் சிலர் புரளி கிளப்புவதற்கு வேறு சுயநல உள்நோக்கங்களே காரணம்.

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1986

தமிழ் உரைநடை இலக்கியத்தின் மறுமலர்ச்சிக்குக் காரணமானவராக விளங்கி பட்டி தொட்டிகளிலெல்லாம் கூடப் பத்திரிகை படிக்கும் பழக்கத்தை உருவாக்கிய அமரர் "கல்கி" அவர்களின் நினைவாக ஆண்டுதோறும் கல்கி நடத்தும் சிறுகதைப் போட்டி இது :



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1000 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 500 |
| மூன்றும் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ. 250 விதம்) | ரூ. | 500 |

ஆக மொத்தம் ரூ. 2000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

* கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

* அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.

* நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

* உறையின்மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.

* பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

* கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

* எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

* சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

* போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 3 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

* எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் 1542—ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் கும்பகோணம் ''ராஜா வேத காவ்ய பாடசாலை''யை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணாக்கர்கள் வேதாத்யாயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒருநாள் உணவளிக்க சுமார் 200/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2000/—மூலதனம் ஏற்படுத்தியோ (அ) அவ்வப்போது ரூ. 200/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் சமாராதனை நடத்தும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடைக்கு 80—G விதியின்படி வருமானவரி விலக்கு உண்டு.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்ய மஹாராஜ ஸாஹேப்

ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,

D–76, 3வது கிராஸ், ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம்—612 001.

# உன் கண்ணில் நீர் வழிந்தால்...!

—மு.மேத்தா

பக்கம் பார்த்துப் பேசுகிறேன் —



நீல வானத்தில் நிலவுப் பூவைச் சுற்றி மலர்ந்திருக்கும் மல்லிகைப் பூக்களைப் பார்த்து நீங்கள் மயங்கியதுண்டா? கடலோரத்தில் காற்று எழுதும் கவிதைகளைப் படித்துவிட்டு உங்கள் கல்மனம் கரைந்ததுண்டா? பட்டாம் பூச்சிகள் முட்டி மோதிக் கொள்வதைப் பார்த்துப் பார்த்து நீங்கள் பரவசப்பட்டிருக்கிறீர்களா?

— அந்த ஆனந்த அனுபவங்கள் அனைத்தையும் நான் அடைந்திருக்கிறேன் — கொஞ்சிக் கொஞ்சி மகிழும் என் குழந்தைகளின் மூலம்.

பிள்ளைப் பருவத்திலிருந்தே நான் எழுதிய கவிதைகளில் எனக்குப் பிடித்தமான கவிதைகள் —

என் 'பிள்ளை'க் கவிதைகள்தான்!

* * * * *

என் குழந்தைகள்......

குறும்பு செய்யும் அரும்புகள்!

கண்ணியமான கலகங்கள்!

'தாய்' நாட்டின் சட்டதிட்டங்களுக்கு எதிராக அவை போர்க்கொடி உயர்த்தும்! புரட்சியும் நடத்தும்!

துள்ளி ஓடிவந்து என் முதுகுக்குப் பின்னால் ஒளிந்து கொள்ளும் குழந்தைகளைத் துரத்திக் கொண்டே வரும் என் மனைவி —

புறாவைத் துரத்திவரும் பருந்தாக என் பார்வையில் படுவாள்.

நான் சிபியாக மாறுவேன்.

சதையை அரிந்து கொடுக்கச் சம்மதித்து தராசுத் தட்டுகளோடு தயாராக இருப்பேன்.

என் மனைவிக்கு எரிச்சல் எரிச்சலாக வரும்.

தராசுத் தட்டுக்களைத் தூக்கித் தானே தன் தலையில் அடித்துக் கொண்டு போய் விடுவாள்!

என் குழந்தைகள் கண்களைக் கசக்கினால் — என்னையே கசக்கிப் பிழிவது போல் இருக்கும்.

அவை கலகலவென்று சிரித்தால் போதும் — சட்டென்று இதயம் சலங்கை கட்டிக் கொள்ளும்.

* * * * *

பொதுவாக எங்கள் குடும்பத்தில் என் மீது ஒரு குற்றச்சாட்டு உண்டு — குழந்தைகளுக்கு நான் அதிகம் செல்லம் கொடுக்கிறேன் என்று.

கொடுத்துவிட்டுப் போகிறேனே...

என் குழந்தைகளுக்குக் கொடுப்பதற்கு இப்போதைக்கு என்னிடம் வேறென்ன இருக்கிறது?

* * * * *

என் குழந்தைகளின் மகிழ்ச்சி எத்தனை எளிமையானது தெரியுமா?

பத்திரிகைகளில் என் படத்தைப் பார்த்தால் போதும் — வானொலியில் நான் எழுதிய திரைப்படப் பாடல்களைக் கேட்டால் போதும் — தொலைக்காட்சியில் நான் தோன்றினால் போதும் —

என் குழந்தைகள் குதூகலமடைந்துவிடுவார்கள்.

என்னுடைய உலகத்தில் என் குழந்தைகளும் இருக்கிறார்கள். என் குழந்தைகளுக்கோ நானே உலகமாக இருக்கிறேன்.

பூமி சூரியனைச் சுற்றி வருவது மாதிரி — இந்தக் குழந்தைகளின் இதயம் என்னையே சுற்றிச் சுற்றி வருகிறது.

* * * * *

சில்லறைக் காசுகளைச் சேமித்து வைத்தது போல் என் குழந்தைகளின் நெஞ்சம் சிறுகச் சிறுகச் சேர்த்து வைத்த சின்னச் சின்ன ஆசைகளில் ஒன்று: என்னோடு சேர்ந்து கடற்கரைக்கு ஒருநாள் போய்வர வேண்டும் என்பது.

இந்த மாதிரி எளிய ஆசைகளைக் கூட வருடக் கணக்கில் நிறைவேற்றி வைக்க முடியாதவனாக நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்.

நாற்பது வயதுகளைத் தாண்டி நடந்து கொண்டிருக்கும் எனக்கு அவ்வப்போது ஞானோதயம் தோன்றுவது உண்டு:

— 'பொற்புதையல்களைப் போன்ற அற்புதமான குழந்தைகள் எனக்குக் கிடைத்திருக்கின்றன. என் குழந்தைகளுக்கோ — இன்னும் கொஞ்சம் பொறுப்பான, சாமர்த்தியமான, வாழத் தெரிந்த ஒரு நல்ல தந்தை வாய்த்திருக்கலாம்!'

GOVERNMENT APPROVED PLOTS FROM

# MURALI'S ESTATS

WILL BE

LIKE CASH CERTIFICATES - CAN BE ENCASHED WITH BUY-BACK FACILITY. THIS MEANS MURALI'S ESTATS CAN MEET YOUR URGENT NEEDS BY PAYING YOUR MONEY BACK WITH ATTRACTIVE INTEREST FROM THE DATE OF PURCHASE OF THE PLOT AT PURCHASE COST.

DREAMS ARE NOT SOLD
THEY ARE MADE!
YOUR DREAMS GET SHAPED AT OUR END.

## "MURALI EXTENDS TO YOU GODDESS BOOMI DEVI'S BLESSINGS

A BOON TO YOUR FAMILY'S PROSPEROUS FUTURE"

"Doubling of Railway Track upto Chengalpattu will materialise by the end of 1986"
News in the Hindu of 4.12.85

DAILY TRAIN SERVICES TO MADRAS BEACH
BUS SERVICE EVERY 5mts TO MADRAS -(PARRYS)

## FIRST TIME IN INDIA!

MURALI INTRODUCES A NOVEL SCHEME BUY BACK FACILITY WITH ATTRACTIVE INTEREST FOR YOUR PLOTS.

Flats, properties, Plots in Madras City in hundreds of locations.

**A RARE OPPORTUNITY TO OWN YOUR HOUSE PLOT WITHIN MADRAS METROPOLITAN LIMITS IN EASY INSTALMENTS**

M.M.D.A.
APPROVED
LAYOUT NO
PPD 49 83
LO

DTP No.
CRDT CPM
83 189
LB 144

**THIS SCHEME HAS BEEN INTRODUCED AS A TOKEN OF SERVICE AND LOVE AS PER THE WISHES OF HINDU SAGES FOR THE CAUSE OF COMMON PEOPLE.**

# SUNDAR NAGAR

WITHIN MADRAS METROPOLITAN CITY LIMIT

12 MINUTES WALK FROM VANDALUR RAILWAY STATION

# SRI LAKSHMINARAYANA NAGAR

14 MINUTES WALK FROM SINGAPERUMAL KOIL OPPOSITE TO MARAI MALAI NAGAR SATELLITE TOWNSHIP SITUATED ON BUS ROUTE-TRUNK ROAD



**BUS ROUTE NOS :**

55, 55G, 55H, 55M, 55N.

18A, 18N, 78, 79A, 110

**PRICE OF 1800 Sq. Ft.**

| | | |
|---|---|---|
| Rs. 9000 + 12 MONTHS | | Rs. 900 |
| Rs. 9000 + 25 MONTHS | | Rs. 520 |
| Rs. 9000 + 36 MONTHS | | Rs. 400 |
| Rs. 5000 + 12 MONTHS | | Rs. 1300 |
| Rs. 5000 + 24 MONTHS | | Rs. 760 |
| Rs. 5000 + 36 MONTHS | | Rs. 580 |

**EASY INSTALMENT SCHEME**

**PRICE OF 1800 Sq. Ft.**

| Scheme 1 | Scheme 2 | Scheme 3 |
|---|---|---|
| 25.5.86 - Rs. 100/- | 25.5.86 - Rs. 100/- | 25.5.86 - Rs. 100/- |
| 28.5.86 - Rs.1300/- | 28.5.86 - Rs. 400/- | 28.5.86 - Rs. 900/- |
| 24 MON. Rs. 150/- | 34 MON. Rs. 150/- | 18 MON. Rs. 200/- |

**SUBSTANTIAL REBATE ON IMMEDIATE FULL PAYMENT**

**INSPECTION ON SUNDAY 1.31 P.M.**
**FROM OUR OFFICE PREMISES**

Pay Rs. 10/- & Reserve your Bus Seat for Inspection in Advance

**Pay Rs. 250/- at spot —**
**Ensure immediate plot Reservation**

**IT IS EXACTLY 14mts walk from G.S.T. Road and Railway Station**

VERY NEAR
COLLEGE, BAZAAR,
CINEMA THEATRE,
POLICE STATION,
ENGINEERING COLLEGE
POLYTECHNIC and ZOO

SWEET PERENNIAL DRINKING WATER AT 8 FEET DEPTH EVEN ON HARD SUMMER

EVEN ON DOWN POUR RAINS — NO WATER STAGNATION

A PANORAMIC VIEW WHICH YOU WILL LOVE AT FIRST SIGHT




# MURALI'S ESTATS

**12, RAMASAMY STREET — T.NAGAR**

(OPPOSITE TO THANGA MALIGAI)

**MADRAS - 600017**



# அ.தி.மு.க. மந்திரிகள் தலையாட்டிப் பொம்மைகளா?

* ஹீரோ.



* மலைபோல்...



* ரொம்பப்....



* ....பிடிக்கும்.

நீங்கள்

கேட்டவை

— தராசு



* ....நல்ல ....சாய்ஸ்.

* உஷா கிருஷ்ணமூர்த்தி, சென்னை—42.

? 'டாக்டரிடம் போய்ட்டு வரேன்' என்று சொல்லிக் கொண்டு கிளம்பலாமா?

! தஞ்சாவூரில் நடந்திருப்பதைப் பார்த்தால் அரசு மருத்துவமனைக்குப் போகும்போது அப்படி சொல்லிக் கொண்டு கிளம்புவது அசட்டுத்தனம் என்றே தோன்றுகிறது!

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? வெயில் எப்படி இருக்கிறது?

! 'சூரியனுக்கே கண் கூசுகிறது!' என்று சிரிக்கிறார் வழுக்கைத் தலையரான என் நண்பர். மகா தைரியம்தான். நமக்கென்னவோ கொஞ்சம் கருணை காட்டுங்கள் என்றுதான் சூரிய பகவானைப் பிரார்த்திக்கத் தோன்றுகிறது. ஒரு ஆறுதல் தெ. மே. ப. கா. இந்த ஆண்டு வழக்கத்தை விடச் சீக்கிரம் வருமாம்.

* எஸ். ஏ. கோவிந்தகுமார், நீடாமங்கலம்.

? இந்த வார ஹீரோ யார்?

! சிவப்புச் சிருடைச் சீடர்களைக் கொண்ட அடிகளார்தான், வேறு யார்? சந்தேகமிருந்தால் மவுண்ட் ரோடில் விசுவரூப கட் அவுட்டை வந்து பாருங்கள்! எந்த சினிமா கட் அவுட்டும் கிட்டத்தில் நெருங்க முடியாது!

* சி. மதியழகன், சங்கரன்பந்தல்.

? திரையில் வலம் வரப் போகும் கல்கியின் பொன்னியின் செல்வன் இயக்குனர் சங்கருக்குத் தங்கள் ஆலோசனை?

! சிக்கிக் கொள்ளாதீர்கள்!

* மு. மதிவாணன், அரூர்.

? இளையராஜாவின் How to name it கேட்டீர்களா?

! Out of this world — How to describe it?

* எஸ். தமீஜுதீன், பண்ருட்டி.

? ரேஸ்கோர்ஸ்திடலில் புதியசட்டமன்றம் கட்டப்படுமாமே?

! பேப்பர் வெய்ட் பறக்குமே என்றும் இரும்புத்தடி சுழலுமே என்றும் நினைத்துப் பார்த்தால் பக்கத்திலேயே இருக்கும் எங்கள் காரியாலயக் கண்ணாடி ஜன்னல்கள் இப்போதே பயத்தில் அதிர்கின்றன. காம்பவுண்டு சுவரை உயர்த்திக் கட்ட வேண்டும்; அடிக்கடி உடைந்த கண்ணாடிகளைப் புதுப்பிக்க வேண்டும் — ஹூம் ஆபீஸுக்கு ஏகப்பட்ட செலவு காத்திருக்கு!

* கா. சேட்டு முகம்மது, விருத்தாசலம்.

? அண்மையில் நீங்கள் ரசித்த அரசியல் ஜோக்?

! தி. மு. க. ஆட்சியின் போது ரேஸ் ஒழிக்கப்பட்டது. அதை எதிர்த்துக் கோர்ட்டுக்குப் போனவர்கள் இப்போது வழக்கை வாபஸ் பெற்றுக் கொண்டதால் தி. மு. க. ஆட்சிக் காலச் சட்டம் அமுலுக்கு வந்து, ரேஸ் நடக்க முடியாமல் இருக்கிறது. ஆனால் அ. தி. மு. க. அரசு, 'ரேஸை ஒழிப்பது தங்கள் நோக்கமல்ல; அரசுடைமையாக்கி நடத்துவதுதான் நோக்கம் என்று நீதிமன்றத்தில் வழக்காடிவிட்டு, இப்போது தாங்கள்தான் ரேஸை ஒழித்து விட்டதாக மார் தட்டுவது முதல்தர அரசியல் ஜோக். சட்டசபைக்கு வெளியே நீதிமன்றத்தில் அரசு சார்பில் வழக்கறிஞர் பேசியது தங்களைக் கட்டுப்படுத்தாது என்று அமைச்சர் கூறுவது அதைவிடப் பெரிய ஜோக்.

* ராணி கோவிந்தகுமார், நீடாமங்கலம்.

? ராஜீவ் காந்தி தற்போது யாரை அதிகம் நம்புகிறார்?

! 'பக்'கென்று பகத்தைக் கைகழுவி விட்டு விட்டதால் அவருடைய செயல் திறனில் நம்பிக்கை இல்லை ராஜீவுக்கு என்று தெளிவாகிறது. மிக முக்கியமான உள்துறை அமைச்சை பூட்டாசிங் பொறுப்பில் விட்டிருப்பதால் அவரை மலைபோல் நம்பியிருக்கிறார் என்றும் தெரிகிறது. பஞ்சாப் நிலவரங்களை வைத்துப் பார்க்கும் போது அங்கே பர்னாலா, இங்கே பூட்டா சிங் — ராஜீவின் ராஜ தந்திரம் புரிகிறது.

* பி.சத்தியநாராயணமூர்த்தி,சாலிகிராமம்.

? சட்டசபைக்கு மட்டம் போடாமல் வரும் உறுப்பினர்களுக்குப் பரிசுகள் வழங்கப் போகிறதாமே, தமிழக அரசு?

! சபாஷ்! ஏதாவது அன்பளிப்புத் தந்தால்தான் எம். எல். ஏக்கள் தங்கள் கடமையைச் செய்வார்கள் என்பதைத் தமிழக அரசு ஒருவழியாகப் புரிந்து கொண்டு விட்டதே!

* ரஜினி குமார், சென்னை—11.

? அ. தி. மு. க. மந்திரிகள் எல்லோரும் தலையாட்டிப் பொம்மைகளா?

! இப்போது சிலர் வாலாட்டவும் செய்கிறார்கள்!

* வி. அருண், சிரமங்கலம்.

? உங்களுக்கு அறிஞர்களைப் பிடிக்குமா? கவிஞர்களைப் பிடிக்குமா?

! அறிஞர்கள், கவிஞர்கள், கலைஞர்கள் எல்லாரையுமே பிடிக்கும். அதுவும் இப்போது ராஜ்ய சபைக்கு நியமிக்கப்பட்டுள்ள ஐந்து பேரையும் ரொம்பவே பிடிக்கும். ரவிசங்கர், அம்ருதா ப்ரீதம், ஆர். கே. நாராயணன், ஹுஸேன், எலா ரமேஷ்பட் — நல்ல சாய்ஸ்.

* சைதன்யன், சென்னை—34.

? ருஷ்ய அணுமின் நிலையத்தில் நடந்த விபத்து பற்றி?

! முதலில் இரண்டு பேர் இறந்ததாகவும் பிறகு மேலும் ஆறு பேர் இறந்ததாகவும் செய்திகள் சிறுகச் சிறுக வருவதால் நம் மக்களுக்கு அதன் பயங்கரம் புரியவில்லை. கம்யூனிஸ நாட்டிலிருந்து செய்திகள் வெளியே வருவது கஷ்டம் — இதுபோன்ற விஷயங்களில் தடுத்து விடுவார்கள். இது ஒருபுறம் இருக்க, கதிரியக்கம் பரவுவதால் உடனடியான பாதிப்பு,மரணம் அதிகமிராது. ஆனால் உடலில் கதிரியக்கம் ஊடுருவிப் புற்றுநோய் தோன்றி நாளடைவில் ஆளைக் கொன்றுவிடும். இப்போது ருஷ்யாவில் நடந்த இந்த விபத்தால் ஸ்வீடன் நாட்டில் மட்டும் அடுத்தநூறு ஆண்டுகளுக்குள் மூவாயிரம் பேர் புற்றுநோய் கண்டு இறந்து போவார்கள் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. அப்படியானால் கதிரியக்கம் பரவியுள்ள இதர நாடுகளையும் கணக்கில் எடுத்துக் கொள்வோமானால் இந்த விபத்தின் கோர தாண்டவம் எத்தகையது என்பது புரியும். விபத்து நடந்த செர்னோபைல் வட்டாரத்திலிருந்து வெளியேற்றப்பட்டுள்ள 49,000 ருஷ்ய மக்களும் ஏதேனும் ஒருவிதத்தில் கதிரியக்க நோயால் பாதிக்கப் படப் போகிறார்கள். இந்த நிலையில் இந்திய அணுமின் நிலையங்களில் விபத்தே நேராது அபாயமே இல்லை என்று, ராமண்ணா மிக இலேசாகக் கூறுவதை ஜீரணிப்பது கஷ்டமாக உள்ளது.

* மனோபாரதி, பாண்டிச்சேரி. *

? இன்றுள்ள அரசியல் கட்சிகளில் ஏழைமையானது எது?

! அறிவுச் செல்வத்துக்கு ஈடான செல்வம் வேறு எதுவும் இல்லை என்பதைப் புரிந்து கொள்ளாமல் மேல்சபையை ஒழித்துவிட முற்பட்டுள்ள அ. தி. மு. க. தான்! தமிழகத்தின் மேல்சபைக்குப் பெருமை சேர்த்த அறிஞர்களை எண்ணிப் பார்த்தாலே மெய் சிலிர்க்கும். இப்போதோ அங்கேயும் அரசியல், சினிமா நோக்கில் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அதுவும் பஞ்சாயத்துத் தேர்தலுக்குப் பிறகு இப்போது தி. மு. க. வின் பலம் அதில் கூடிவிடும் என்று அஞ்சி மேல்சபையையே ஒழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறது அ. தி. மு. க. ஆட்சி. மேல்சபையின் மேன்மையைக் காப்பதற்குப் பதில் அதை அடியோடு ஒழிக்க முற்படுவதால் அ. தி. மு. க. அரசு மட்டுமின்றித் தமிழகமே ஏழையாகி விடும்.

* ரூ 10 பரிசு பெறுபவர்:
மனோபாரதி,
3, முதல் வீதி,
ராஜா நகர், பாண்டிச்சேரி.
— 605 013.



"ஏன் உன் குடும்பத்தில் உள்ள பத்து பேரும் மொட்டை அடிச்சுக்கிட்டு வந்திருக்கீங்க?"

"ஒருத்தனுக்குத்தான் பிரார்த்தனை: ஆனால் இலவச மொட்டை என்கிறதாலே எல்லாருமே மொட்டை அடிச்சுகிட்டோம்."

— லலிதா செல்லப்பா.




"உமக்கு மூக்குப் பொடி போடும் பழக்கம் உண்டா?"

"உண்டு சார். எப்படி கண்டுபிடிச்சீங்க?"

"நீங்க அனுப்பும் ஃபைல்களை எடுத்துப் பிரிச்சதும் தும்மல் வரது...!"

"என்னோட கூட பீச்சுக்கு வரியா?"

"எந்த இடத்தில இருக்கு பீச்சு?"

"அது தெரிஞ்சா உன்னை எதுக்குக் கூட வரச் சொல்லிக் கூப்பிடறேன்?"



"அந்தத் தயாரிப்பாளர் ரொம்ப முன் ஜாக்கிரதைப் பேர்வழி!"

"எப்படி?"

"அவரோட படத்தில் தீப்பொறி வசனங்கள் அதிகமாக இருப்பதால் எல்லாத் தியேட்டர்களுக்கும் தீயணைக்கும் வண்டியை அனுப்பியிருக்கார்!"

— எஸ். முகம்மது யூசுப்.

ஹூஸ்டன் நகரப் பெண்ணின் வளர்ப்புக் கிளி ஓயாமல் இருமுவதாக, கால்நடை வைத்தியரிடம் கொண்டு சென்றாள். கிளியைச் சோதித்த டாக்டர் அதற்கு எந்தவித நோயும் இல்லை என்றும், அதன் எஜமானி விடாது சிகரெட் பிடிப்பதால் இருமுவதாகவும் அந்த இருமலைக் கிளி பழகிக் கொண்டு அவளைப் போல் இருமுவதாகவும் கூறினார். எஜமானி புகைபிடிப்பதை நிறுத்தினால் உடனே கிளி இருமுவதை நிறுத்திவிடும் என அறிவுரை கூறினார்!

— கனகா செங்கைமுத்து.

‘நான் ஒருமுறை கல்கத்தாவிலிருந்து சென்னைக்கு ரயிலில் வந்து கொண்டிருந்த போது என்னுடன் ஒரு தம்பதியும் அவர்களது ஐந்து வயது பெண்ணும் பயணம் செய்தனர்! அப்பெண் மிகவும் அடம் பிடித்துக் கொண்டிருந்ததால், அவளது கவனத்தைத் திருப்ப எண்ணி, அவளுடைய பொம்மையை எடுத்து, ஜன்னலுக்கு வெளியே எறிவது போல் பாசாங்கு செய்து, ஒளித்து வைத்தேன். பிறகு ‘இதோ பார் மாஜிக்! இதோ பொம்மை திரும்பி வந்துவிட்டது பார்!’ என்று பொம்மையைக் கொடுத்தேன். உடனே அப்பெண், ‘நானும் மாஜிக் செய்வேனே!’ என்று கூறி, கண் இமைக்கும் முன் தன் அம்மாவின் கைப்பையை எடுத்து ஜன்னலுக்கு வெளியே எறிந்துவிட்டாள்! பிறகு, ‘எனக்குப் பாதி மாஜிக்தான் தெரியும். அந்தப் பையை நீங்க இப்போ வரவழைங்க பாக்கி பாதி மாஜிக் மூலம்!’ என்றாள்!

(மிரர் பத்திரிகையில் ஒரு கடிதம்)

தகவல்: சம்பத்குமாரி



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani.

Editor: K. Rajendran.



**இப்போது, லக்ஸையும் விட நான் அதிகம்**
**விரும்பும் சோப் ஒன்று உள்ளது", என்கிறுர் ரேவதி.**

# புதிய லக்ஸ்

**நேர்த்தியான புது மணம்**

அதன் புத்தம் புது, மலர்களின் சாற்று மணம் பற்றி ஒவ்வொரு சினிமா நட்சத்திரமும், தம் விருப்பமான முறையில் விளக்குகிருர்—"மென்மைய மிக்கது", "கிளர்ச்சியூட்டுவது".



**கவர்ச்சியான புதுத் தோற்றம்**

உங்களைப் போலவே கவர்ச்சியானது நவநாகரீகமானது அது—கண்ணைக் கவர்வதும்கூட! மூன்று வகை அழகிய வண்ணங்களில் கிடைக்கிறது—இளஞ் சிவப்பு, பச்சை மற்றும் மஞ்சள்.










புதிய
**லக்ஸ்**
**சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka